# சிசுக்களின் ஆடைகளை லக்ஸ் பத்திரமாகப் பராமரிக்கிறது

குறுநடை பயிலும் குழந்தையிடம் நீடித்த பரிசுத்தத்தை எதிர்பார்க்க முடியாதென்பதை விவேகமுள்ள அன்னை அறிவாள். புத்தம் புதுக் கருக்கான ஆடைகளும் சீக்கிரமே அழுக்காகி விடும்! பரவாயில்லை—மென்மையான லக்ஸ் தூள்களில் நம்பிக்கை வைத்தால், பத்திரமாகத் துணிகளுக்குத் தூய்மையை நீங்கள் மீட்டுக்கொடுக்கலாம்—பச்சிளஞ் சருமத்துக்கு ஏற்றவாறு அவற்றை மழமழப்புடனும் வைத்திருக்கலாம்.

## இலவசம்

“குழந்தைகளின் ஆடைகளை சர்வ சலவை செய்யும் முறை” என்னும் துண்டுப் பிரசுரம் இலவசம். லக்ஸ் பெட்டியின் மேல்மூடியிலுள்ள பாப்பா படத்தை “த. பெ. 409, பம்பாய்”க்கு அனுப்புங்கள்.




அழகு மிக்க ஆடைகளுக்கு நெடுங்காலம்

புதுமைத் தோற்றம் அளிப்பது லக்ஸ்

மலர் 16 இதழ் 5
# கல்கி
துன்முகி வரு ஆவணி 18

## பொருளடக்கம்

செப்டம்பர் 2, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# யோகாசனத்துக்கு யோகம்!




"புது டில்லியில் உள்ள யோகாசனப் பயிற்சிசாலையில் ஜனாதிபதி ராஜன்பாபு உட்பட இந்திய சர்க்கார் மந்திரிகளில் பலர் பயிற்சி பெற்று வருகிறார்கள்."
—பத்திரிகைச் செய்தி




மலர் 16 { தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற } துன்முகி
இதழ் 5 { தாயென்று கும்பிடடி பாப்பா – பாரதியார் } ஆவணி 18


# வேண்டாம் இந்த மின்சாரத்தறி!

கைத்தறி நெசவாளர்களின் கூக்குரல், செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாகி விடுமோ என்று எண்ணினோம். நல்ல வேளையாக, நிலைமை மாறியிருக்கிறது.

நெசவாளர்களுடைய தீனக் குரல் யார் காதில் விழவேண்டுமோ, அவர்களுடைய காதில் பட்டிருப்பதாகத் தோன்றுகிறது; நெசவாளர்களைச் சூழ்ந்துள்ள இருளில் மின்னொளி தோன்றி யிருக்கிறது! தேர்தல் பயம் ஒன்று இருக்கிறதல்லவா?

பவானியில் சென்ற வாரம் நடந்த தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில், இந்திய சர்க்காரின் மின்சாரத் தறிக் கொள்கையைக் கண்டித்துப் பலர் காரசாரமாகப் பேசினார்கள் என்றும் தெரிகிறது. அந்தக் கூட்டத்தில் சென்னை சர்க்கார் மந்திரிகளில் சிலரும் பிரசன்னமாகி யிருந்தார்கள்.

கைத்தறிகளை மின்சாரத்தறிகளாக மாற்றுவது என்ற யோசனையைத் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி ஆதரிக்க முடியாது என்ற கருத்தை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அறிவிப்பதென்று முடிவாயிற்று.

இந்த முடிவைக் கண்டு கைத்தறி நெசவாளர்கள் மாத்திரமல்ல, சென்னை ராஜ்ய மக்கள் அனைவரும் மகிழ்ச்சி அடைவார்கள் என்பதில் ஐயமில்லை.

ஏனெனில், இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன், குறிப்பாக இந்த ராஜ்யத்தில் கைத்தறி நெசவாளர்கள் படாதபாடு பட்டார்கள் என்பதைப் பொதுமக்கள் மறக்கவில்லை.

மில் ஜவுளிகளின் போட்டியால் கைத்தறித் துணிகள் நசித்துப் போயின. அதன் விளைவாக ஏற்பட்ட பஞ்சத்துக்குப் பல நெசவாளர்களின் குடும்பங்கள் பரிதாபகரமாகப் பலியாயின.

அன்னிய ஆட்சியில் கூட அழிந்துவிடாத கைத்தறி நெசவுத் தொழில் சுதந்திர சர்க்காரின் ஆட்சியில் ஆதரவில்லாமலும் போட்டியினாலும் அழிந்தால் அது வெட்கக் கேடாகும் அல்லவா?

சென்ற ஒன்றிரண்டு வருஷங்களாக நெசவாளர்களின் நிலைமை ஓரளவு சீர்ப்பட்டு வந்தது. அவர்களின் நிலைமை முற்றிலும் சீர்ப்படுவதற்குள், இந்திய சர்க்கார் மின்சாரத் தறிகளுக்கும் பெரிய இடம் கொடுக்க வேண்டும் என்ற அர்த்தமற்ற, யோசனையற்ற முடிவுக்கு வந்தது வருந்தத்தக்க விஷயமாகும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்படி இப்போது உற்பத்தியாவதைக் காட்டிலும் அதிகத் துணி தேவை என்பதற்காகவே, மின்சாரத் தறிகளைப் புகுத்துவதாக மந்திரிகள் இடைவிடாது கூறுகின்றனர்.

பாரத நாட்டுக்குத் தேவையான துணிகளை இந்நாட்டில் உள்ள சுமார் இருபது லட்சத்துக்கு மேற்பட்ட கைத்தறிகளும் ஏராளமான மில்களும் எளிதில் உற்பத்தி செய்துவிட முடியும்.

கைத்தறி நெசவாளர்களுக்கு மறுபடியும் ஏற்பட்டுள்ள இந்தச் சோதனைக் காலத்தில், அகில இந்திய கைத்தறிக் குழு அங்கத்தினர்களில் ஒருவரான ஸ்ரீ சோமப்பா மின்சார விசைத்தறி விஷயமாகத் தமது கருத்தைத் துணிந்து கூற முன் வந்திருப்பது போற்றத் தக்கதாகும். ஸ்ரீ சோமப்பா இந்திய சர்க்காரின் மின்சாரத் தறிக் கொள்கையை மிகவும் வன்மையாகக் கண்டித்துள்ளார்.

"கைத்தறிகளுக்குப் பதிலாக மின்சாரத் தறிகளைப் புகுத்தும் திட்டம் யாரும் விரும்பாதது. அபாயகரமானது. இந்தத் திட்டத்தை இந்திய சர்க்கார் கைவிடவில்லையானால், அகில இந்தியக் கைத்தறிக் குழுவில் உள்ள உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்கள் யாவரும் ராஜிநாமா செய்துவிடுவார்கள். அவர்கள் மேற்படி குழுவிலிருந்து ராஜிநாமா செய்யுமுன், மின்சாரத்தறிகளால் நெசவாளர்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்டநஷ்டங்களைப் பிரதம மந்திரியிடமும், திட்டக் கமிஷனிடமும், காங்கிரஸ் மேலிடத்தாரிடமும் எடுத்துக் கூறுவார்கள். சர்க்காரின் புதிய திட்டத்தின் விளைவாக ஏராளமான கைத்தறி நெசவாளர்கள் வேலையின்றிக் கஷ்டப்பட நேரும்; தங்கள் ஜீவனத்துக்குக் கைத்தறிகளையே நம்பியுள்ள லட்சக்கணக்கானவர்களின் நிலைமை படுமோசமாகி விடும்."

இவ்விதம் ஸ்ரீ சோமப்பா சர்க்காரின் மின்சாரத் தறிக் கொள்கையால் ஏற்படக்கூடிய விபரீத விளைவைத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

*

மின்சாரத் தறிகளைப் புகுத்துவதால் ஏற்படும் வேலையில்லாக் கஷ்டத்தை வேறு விதமாகச் சமாளிப்பதும் முடியாத காரியம் என்பது ஏற்கெனவே நெசவாளர்கள் துன்பத்துக்கு உள்ளானபோது வெளியாகி விட்டது.

தலைமுறை தலைமுறையாகக் கைத்தறிகளையே நம்பி வாழ்ந்து வந்துள்ள நெசவாளர்கள் வேறு எந்த வேலைக்குத் தகுதியாக இருக்க முடியும்?

மின்சாரத்தறித் திட்டத்தின்பலனாக வருஷந்தோறும் இருபதாயிரம் நெசவாளர்கள் வேலையற்றுப் போவார்கள் என்று கூறப்படுகிறது. இப்போது நாட்டில் உள்ள வேலையற்றோர் பட்டாளத்தின் வாழ்வுக்கு வகை செய்ய முடியாத சர்க்கார், அந்தப் பட்டாளத்தில் புதிதாகச் சேரும் இருபதாயிரம் பேருக்கு என்ன வழி செய்ய முடியும்?

எனவே, மின்சாரத் தறிக் கொள்கை அமுலுக்கு வந்தால் சர்க்கார் சமாளிக்க முடியாத புதிய பிரச்னையைச் சிருஷ்டித்தவர்களாவார்கள் என்பதை மீண்டும் வற்புறுத்த விரும்புகிறோம்.

மின்சாரத் தறிகளைப் புகுத்தும் திட்டத்தை ஆந்திர சர்க்கார் அவர்களுடைய ராஜ்யத்தில் அமுலுக்குக் கொண்டு வர மறுத்து விட்டதாக அறிகிறோம்.

தமிழ் நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டியின் முடிவுக்கு இணங்க, சென்னை சர்க்காரும் மின்சாரத் தறி மோகத்தை விட்டு விடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

* * *

மத்திய சர்க்காரிலேயே சில மந்திரிகளுக்கு இந்தக் கொள்கை பிடிக்கவில்லை என்று தெரிகிறது. கைத்தறி வைத்திருப்பவர்கள் தங்கள் தறிகளை மின்சாரத் தறிகளாக மாற்றிக் கொண்டால் 'அதிக வருமானம் அடையலாமே என்று வாதம் செய்கிறார்கள் மத்திய சர்க்காரில் சிலர்.

இது அறியாமையில் தோன்றிய வாதம். மின்சாரக் கம்பி போகும் மார்க்கங்களில் தான் பணமுள்ளவர்கள் மின்சாரத் தறிகள் அமைத்துக் கொள்ள முடியும். ஆயிரக்கணக்கான கிராமங்களில் ஏராளமாகவுள்ள பரம்பரை நெசவுத்தொழில் குடும்பங்களுக்கு மின்சாரம் கிடைக்காது. வசதி யிருக்காது. வசதி யிருந்தாலும் முதலீடு செய்யப் பணம் இருக்காது. மின்சாரம் செல்லும் இடங்களில் சிலர் நன்றாக வாழ்ந்து, அக்கம் பக்கத்துக் கிராமங்களில் அவர்களுடைய பந்துக்களும் தாயாதிகளும் தொழில் கெட்டு வறுமையில் அலைந்து கொண்டிருந்தால் சகிக்க முடியுமா?

தற்போது இந்தியாவில் மின்சார விசைத் தறிகளை யார் வைத்திருக்கிறார்கள் என்று சுற்றிப் பார்த்துத் தெரிந்து கொண்டால் விஷயம் விளங்கும். நெசவுத் தொழில் ஜாதியைச் சேர்ந்த யாருமே மின்சாரத் தறிகள் வைத்துக்கொண்டு லாபம் அடையவில்லை. மின்சாரத் தறிகளைச் சின்ன முதலாளிகள் தான் வைத்திருக்கிறார்கள்.

## இது மைல் கல்லா ?




ராஜ்யப் புனரமைப்புச் சட்டம் மக்கள் சபையில் நிறைவேறியபோது, பாரத தேசம் முன்னேற்றப் பாதையில் இன்னும் ஒரு மைல் கல்லைத் தாண்டி விட்டது என்று மந்திரி பந்த் கூறினார்.

யாரேனும் கைத்தறித் தொழிலாளிகள் தங்கள் தறிகளை மின்சாரத் தறிகளாக மாற்றிக் கொண்டால் யாரும் ஆட்சேபிக்க வேண்டியதில்லை. ஆனால் தற்போது ஸ்ரீ டி.டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் பகிரங்கப்படுத்தியிருக்கும் முறையும் நோக்கமும் தவறாகும். அவர் அதைச் சீக்கிரமே வாபஸ் வாங்கிக் கொண்டு தென்னாட்டிலும் ஆந்திர தேசத்திலும் உண்டாகியிருக்கும் ஏழைகளின் பீதியைத் தீர்க்க முற்படுவார் என்று நம்புகிறோம்.

## முரார்ஜியின் உண்ணாவிரதம்

முரார்ஜி தேசாய் அவர்களின் உயிர் காப்பாற்றப்பட்டது அறிந்து பாரத நாட்டிலுள்ள அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்திருப்பார்கள்.

இனிமேலாவது குஜராத் மக்கள் துஷ்டர்களுடைய பேச்சைக் கேட்காமல் எப்போதும் போல் பெரியோர்களுடைய யோசனைகளைக் கேட்டு அமைதியாக நடந்து கொள்வார்கள் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது.

இந்தக் கலியுகத்தில் சில துஷ்டர்கள் எப்போதும் இருந்து கொண்டே யிருப்பார்கள். அவர்களைக் கண்டு பயப்படாமல் நடந்து கொள்ள வேண்டியது மற்றப் பொது மக்களுடைய கடமையாகும். இப்படிச் செய்யாமற்போனால் துஷ்டர்களுடைய ஆட்சியே நிலவி விடும். தைரியமில்லாத சாந்தகுணம் கோழைத்தனமாக முடிந்துவிடும். முரார்ஜி தேசாய் அவர்களுடைய கோபம் துஷ்டர்கள் பேரில் அவ்வளவாக இல்லை. அவர்களை எளிதில் திருத்த முடியாது என்பது அவருக்குத் தெரியும். ஆனால் பெருவாரியாக உள்ள யோக்கியர்கள் பயங்கொள்ளிகளாகப் போய் விட்டார்களே என்பதுதான் அவருடைய வருத்தம். அதற்காகத்தான் அவர் உண்ணாவிரதம் இருந்தார். அந்த நிலைமை மாறிவிட்டதாக இப்போது தெரிய வருகிறது.

சமீபத்தில் ஏற்பட்ட குழப்பம் அடங்கிப் போகும் என்பது நிச்சயம். பிறகு வெகு சீக்கிரத்தில் புதிய பம்பாய் ராஜ்யம் மிக உன்னத நிலையை அடைந்து, பாரதநாடு முழுவதிலும் முதல் ஸ்தானம் பெற்று வழி காட்டும் என்பதில் ஐயமில்லை.

# பளிக்துளி

''லண்டன் மாநாட்டிலிருந்து அமெரிக்காவுக்குத் திரும்பியதும் ஸ்ரீ டல்லஸ் சூயெஸ் சம்பந்தமாக மிகவும் சுறுசுறுப்புடன் வேலை செய்து வருகிறார்.''-செய்தி

சூயெஸ் விஷயம் 'டல்' லாகி விடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார் போலும்.

★

''தற்போது சென்னை நகரில் ஓடும் சர்க்கார் பஸ்களின் எண்ணிக்கை 413. இதில் மூன்று பழைய பஸ்கள் சர்க்காரால் தள்ளுபடி செய்யப்பட்டன.''

—செய்தி

போ க பாக்கி பஸ்கள் பிரயாணிகளால் தள்ளப்பட்டு வருகின்றனவோ!

★

''சமீபத்தில் பம்பாயில் பெய்த பெரு மழையில் ஒரு கடையில் இருந்த பெருங்காய ஸ்டாக் முழுதும் பாழாகி விட்டதால் அவ்வளவும் கடலில் எறியப்பட்டது.'' —செய்தி

எல்லாம் கடலில் கரைத்த பெருங்காயமாயிற்று போலும்!

★

''கருருக்கருகில் ஒரு வாழை மரம் ஆறு குலைகளை ஈன்றுள்ளது. இந்த அதிசயத்தைச் சுற்று வட்டாரத்திலுள்ள மாணவர்கள் தினம் தவறாமல் வந்து பார்த்து விட்டுப் போகின்றனர்.''

—செய்தி

குலைகள் பழுக்கும் வரை மாணவர்கள் வந்து கொண்டுதானிருப்பார்கள்!

★

''ஆரணியில் பலத்த மழை பெய்ததின் விளைவாகச் சாக்கடை ஜலத்தின் துர்நாற்றம் பூராவும் ஒழிந்து விட்டது. சுமார் ஏழு செண்டு மழை இருக்கலாம்.''

—செய்தி

செண்டு மழை பெய்தால் நாற்றம் போகாமல் என்ன செய்யும்?

★

''நாகை தாலுகாவிலுள்ள சிக்கல் கிராமத்தில் கம்யூனிஸ்டு கிஸான்கள் அதிகக் கூலி வேண்டுமென்று தகராறு செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.''

—செய்தி

இதனால் மேற்படி கிராமத்தில் புதிய சிக்கல் தோன்றியிருக்கலாம்.



# திருவாரூர் சங்கீத மும்மூர்த்திகள் நினைவு மண்டபத் திருப்பணி

சகல கலா ரசிகர்களையும் மகிழ்வித்து, அவர்களுடைய மனம் குளிரச் செய்யும் சம்பவம் சென்ற வாரம் தென்னாடுடைய சிவன் ஸ்ரீ தியாகராஜர் என்ற திருநாமம் தரித்து எழுந்தருளியிருக்கும் திருவாரூரில் நிகழ்ந்தது. அந்த திவ்ய ஸ்தலத்தில் அவதரித்து, நாத உபாசனை செய்த சங்கீத மும்மூர்த்திகளான ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாம சாஸ்திரிகள் ஆகியோருக்கு நினைவு மண்டபம் அமைப்பது சம்பந்தமான பூர்வாங்க அலுவல்கள் சென்ற வாரத்தில் திருவாரூரில் பூர்த்தியாயின. அந்தக் கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ள சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராம அய்யர், வடபாதிமங்கலம் ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், சிம்ஸன் கம்பெனி அதிபர் ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன், 'கல்கி'ப் பத்திரிகையின் அதிபர் ஸ்ரீ சதாசிவம், சென்னை சர்வகலாசாலையைச் சேர்ந்த டாக்டர் ராகவன், சென்னை வழக்கறிஞர் ஸ்ரீ. டி. வி. விசுவநாத அய்யர் முதலிய பிரமுகர்கள் திருவாரூருக்கு விஜயம் செய்து, அங்கு புதுத் தெருவில் ஸ்ரீ தியாகராஜர் பிறந்த மனையை ,,யும் மேட்டுத் தெருவில் சியாம சாஸ்திரிகள் பிறந்த மனையையும் விலைக்கு வாங்கித் தங்கள் முதற் கடமையை நிறைவேற்றினர். ஸ்ரீ தீக்ஷிதர் அவர்கள் பிறந்த மனை ஏற்கெனவே வாங்கப்பட்டு, அங்கு அவரது நினைவு மண்டபத் திருப்பணி தொடங்கியிருக்கிறது. சங்கீத மும்முனிகள் அவரவருடைய இஷ்ட தெய்வங்களின் திரு உருவங்களைப் பூஜிப்பது போல், சிலை விக்கிரக வடிவில் அமைக்கத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

ஒரே காலத்தில் ஒரே ஊரில் அவதரித்துத் தனிப்பெரும் சிறப்புடன் விளங்கும் தென்னாட்டுச் சங்கீத மூர்த்திகளின் பெயரில் அந்தப் புனித தலத்தில் ஒரு கர்நாடக சங்கீதக் கல்லூரியை நிறுவ வேண்டும் என்பதும் நினைவு மண்டபத் திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் பக்தர்களின் விருப்பமாகும். சங்கீத உலகில் அவதார புருஷர்களாக விளங்கிய அந்தப் புண்ணிய மூர்த்திகளுக்கு அவர்கள் அவதரித்த க்ஷேத்திரத்திலேயே நினைவு மண்டபங்களும் சங்கீதக் கல்லூரியும் அமைப்பது மிகவும் பொருத்தமான காரியம் அல்லவா?

# சபாஷ், கூப்பர்!

ஷெர்மன் கூப்பர் பாரத நாட்டையும் பண்டித ஜவாஹர்லால் நேருவின் அயல் நாட்டுக் கொள்கையையும் நன்றாகப் புரிந்து கொண்ட சில அமெரிக்கர்களில் ஒருவர். அமெரிக்காவின் தூதராக இந்தியாவிலிருந்தவர். ஐஸன்ஹோவரின் பெருமதிப்புக்கும் அன்புக்கும் பாத்திரமானவர். ஐஸன்ஹோவரின் வற்புறுத்தலின் பேரில் இந்தியாவில் தாம் வகித்த தூதுவர் பொறுப்பை ராஜினாமாச் செய்து விட்டு அமெரிக்கத் தேர்தலில் ஆளும் கட்சியாகிய குடியரசுக் கட்சியின் சார்பில் அபேட்சகராக நிற்பவர்.

ஸ்ரீ கூப்பர் அமெரிக்காவின் ஆளும் கட்சியின் அபிப்பிராயத்துக்கு மாறாகத் துணிந்து ஓர் உண்மையைக் கூறியிருக்கிறார்.

சில நாட்களுக்கு முன் அமெரிக்காவின் அயல் நாட்டு மந்திரி டல்லஸ் மனச்சாட்சியைக் கழற்றித் தூர வைத்துவிட்டு, "கோவா போர்ச்சுகலின் ஒரு மாகாணம்தான்" என்று ஒரு போடு போட்டார்.

உலகில் எந்த நாட்டுக்கும் ஒரு மாகாணம் ஐயாயிரம் மைல்களுக்கு அப்பாலிருப்பதாக நாம் இதுவரை கேட்டதில்லை!

இது பாரதத்தில் எத்தகைய மனக் கசப்பை வளர்த்தது என்று சொல்ல வேண்டியதில்லை. இந்நிலையில் ஐஸன்ஹோவருக்கு மிக வேண்டிய நண்பரான கூப்பர் கோவாவிலிருந்து போர்ச்சுகல் தனது ஆதிக்கத்தைச் சுருட்டிக் கொண்டு போக வேண்டியதுதான் என்று கூறி விட்டார். அத்துடன், "அமெரிக்கா பாகிஸ்

தானுக்கு ராணுவ உதவி யளித்திருப்பது பாரத நாட்டில் அமெரிக்காவினிடம் அதிருப்தியை வளர்த்திருக்கிறது. ஒரு நாட்டுக்கு ராணுவ உதவி யளிக்கும்போது, அந்த நாட்டின் அண்டையிலிருக்கும் நாட்டின் உணர்ச்சிகளையும் மதித்து நடப்பது அவசியமாகும். நம்முடன் நீண்டகாலமாகச் சிநேகமாக உள்ள பாரத நாட்டின் உணர்ச்சிகளைப் புண்படுத்தும் வகையில் பாகிஸ்தானுக்கு ராணுவ உதவியளித்தது தவறு'' என்றும் கூறியிருக்கிறார்.



ஸ்ரீ கூப்பர்

கட்சி ரொம்பவும் செல்வாக்கு இழந்திருக்கிறது. இனி அமெரிக்கப் பொதுமக்களின் செல்வாக்கைப் பெறத் தங்கள் கொள்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டியதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியில்லை. அந்த முறையில் தான் கூப்பர் இப்போது இம்மாதிரி பேசத் தொடங்கியிருக்கிறார்.

அமெரிக்க ஜனாதிபதியும் கூப்பரின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் பேசினால் வியப்படைய ஒன்றுமில்லை. இவையெல்லாம், அணு ஆயுதமின்றி,

அமெரிக்காவில் வெளி நாட்டு மந்திரியான டல்லஸின் சமீபகால அறிக்கைகளின் காரணமாகவும், வெளி நாட்டுக் கொள்கைகளின் காரணமாகவும் ஆளும் கட்சியான குடியரசுக் யுத்த தளவாடமின்றிப் பாரதத்தின் ஆத்ம சக்தி அடைந்துள்ள செல்வாக்கையே காண்பிக்கிறது. நேருவின் அயல்நாட்டுக் கொள்கையின் சிறப்பையே எடுத்துக் காட்டுகிறது.

# சித்தன்னவாசல்

"அழகெனும் அழகும் ஓர் அழகு பெற்றதே!" —கம்பர்

பாரத நாட்டிலே எத்தனையோ அதிசயங்கள்! அவற்றைப் பார்த்துப் பார்த்து மேல் நாட்டினரும் கீழ் நாட்டினரும் வியப்புக் கடலில் ஆழ்கின்றனர். அவ்வாறு பெரு வியப்பை அளிக்கத் தக்க அதிசயங்களில் ஒன்று அஜந்தா வண்ண ஓவியங்கள்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு பாரத நாட்டுச் சித்திரக் கலைஞர்கள் என்றும் அழியா வர்ணத்தில் வரைந்துள்ள மிக அற்புதமான சித்திரங்களைப் பார்க்கும் போது வியப்புத் தோன்றுவது இயல்புதானே!

இப்படிப்பட்டதோர் அஜந்தா தமிழ் நாட்டிலும் இருக்கிறது. தமிழ் நாட்டில் புதுக்கோட்டையிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள சித்தன்ன வாசலில் மலையைக் குடைந்து செய்யப்பட்ட மண்டபம் ஒன்று இருக்கிறது. அந்த மண்டபத்தில் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் சித்திரக்காரப் புலி மகேந்திர பல்லவனால் சிருஷ்டிக்கப்பட்ட அற்புத வண்ண ஓவியங்கள் சற்றுச் சிதிலமடைந்து காணப்படுகின்றன; அந்தச் சித்திரங்களைப் பார்க்கக் கொடுத்து வைத்தவர்கள் 'எப்படிப்பட்ட உயர்ந்த நிலையிலிருந்த தமிழினம்' என்று பெருமிதம் அடைவார்கள்.

அந்த மண்டபத்துத் தூண் ஒன்றில் ஆரணங்கு ஒருத்தி மிக ஒய்யாரமாகக் கைகளை வீசி நின்றவண்ணம் வருவோர் போவோரை ஆயிரம் வருஷங்களாகப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அந்த அழகைக் கண்டவர்கள் அழகின் எல்லையைக் கண்டவர்கள் என்பதில் சந்தேகமில்லை. அதைக் கண்டதும், கம்பன் சீதையைப் பற்றிக் கூறிய மேற்கண்ட வர்ணனைதான் நினைவுக்கு வரும்.

குறைவுபட்ட அஜந்தா ஓவியங்களைப் பூர்த்திசெய்து பண்பட்ட நமது ஓவியர் மணியம் சித்தன்ன வாசலில் சற்றுச் சிதிலமடைந்துள்ள இந்த ஆரணங்கின் உருவத்தையும் நிறைவு செய்து நமது நேயர்களுக்கு இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்குகிறார். ஆனால் பெயர்த்தெழுதப்பட்ட இச்சித்திரத்தின் அழகில் மயங்கி மூல ஓவியத்தைப் பார்க்கச் சித்தன்ன வாசலுக்கே புறப்படும்படி நேர்ந்து விட்டாலும் நாம் அதிசயப் படமாட்டோம்!

ஆகஸ்ட்
31 முதல்

பிலிம் செண்டரின்

# நன்னம்பிக்கை

டைரக்ஷன்........
வேம்பு & சார்லி

சங்கீதம்........
S.V. வெங்கட்ராமன்



சென்னை
கெயிட்டி
பாரத்
மஹாலக்ஷ்மி
மற்றும் தென்னாடெங்கும்

பிலிம் செண்டர் பிரைவேட் லிட். மதராஸ்-26.

BAKTHA

# விலைவாசி தர்பார்

சாவி

### காட்சி 1.

[ நாட்டின் ஏக சக்ராதிபதியாக விளங்கும் திருவாளர் விலைவாசியார் ஆனந்த நித்திரையில் ஆழ்ந்திருக்கிறார். அப்போது யாரோ கதவைப் பலமாகத் தட்டும் சப்தம் கேட்கிறது. ]

விலைவாசி:—யார் அது?

அரிசி:—நாங்கள்தான், தூதுகோஷ்டி!

விலைவாசி:—தூதுகோஷ்டியா? எந்தத் தூது கோஷ்டி? எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்!

மிளகாய்:-நாங்கள் உணவுப் பொருள்களின் பிரதிநிதிகள். மளிகைக் கடையிலிருந்து வந்திருக்கிறோம்.

விலைவாசி (மிளகாய் நெடி தாங்காமல் தும்மிக்கொண்டே):— உங்களுக்கு இப்போது என்ன வேண்டும்?

சர்க்கரை:—ஒன்றுமில்லை. தங்களுடைய தயவுதான் வேண்டும்.

விலைவாசி:—என் தயவா! என் தயவு உங்களுக்கு எதற்கு?....

நல்லெண்ணெய்:—தங்கள் தயவு இருந்தால்தான் எங்களை மக்கள் மதிக்கிறார்கள். விலைவாசி உயர்ந்தால்தானே மார்க்கெட்டில் எங்கள் மதிப்பும் உயர்கிறது?

விலைவாசி:—ஆமாம்; உண்மைதான்; என் மதிப்புக்கூட அப்போதுதான் உயர்கிறது. நான் இறங்கினால் என் மதிப்பும் குறைகிறது?

காப்பிக் கொட்டை:—ஆகையால், எப்படியாவது எங்கள் மதிப்பையும் தங்கள் மதிப்பையும் மார்க்கெட்டில் தாங்கள்தான் உயர்த்திவிட வேண்டும்.

விலைவாசி:—மிஸ்டர் காப்பிக் கொட்டை! உமக்கு எப்போதுமே மார்க்கெட்டில் மதிப்பு உண்டே? உம்மை விரும்பாதவர்கள் ரொம்ப அபூர்வமல்லவா?

காப்பிக்கொட்டை:—அப்படிச் சொல்லாதீர்கள்? என் மதிப்பைக் கெடுக்கத் தான் கூடவே இந்த 'டீ' காத்துக் கொண்டிருக்கிறதே! போதாக் குறைக்கு இந்தத் தேயிலையைத் தேசியபானம் என்று வேறு பிரசாரம் செய்கிறார்கள்.

விலைவாசி:—அப்படியா? இருக்கட்டும். நீங்கள் எல்லாரும் போய் வாருங்கள், நான் பார்த்துக் கொள்கிறேன்.

விளக்கெண்ணெய்:—மறந்துவிடப் போகிறீர்கள்? தாங்கள் கண்டிப்பாக ஏதாவது செய்தாக வேண்டும்.

விலைவாசி:—என்ன விளக்கெண்ணெயாரே? உம்மைப்போல் என்னையும் 'வழவழா' வியாபாரம் என்று நினைத்துக் கொண்டீரா? நான் செய்வதாகச் சொன்னால் சொன்னதுதான்; கண்டிப்பாகச் செய்தே தீருவேன்.

[ தூதுகோஷ்டி சந்தோஷமாகத் திரும்பிச் செல்கிறது. விலைவாசி மட்டும் "யாரைப் பிடித்தால் தன் காரியம் கைகூடும்?" என்ற கவலையுடன் முன்னும் பின்னும் உலவுகிறது.]

### காட்சி 2.

[ கள்ள மார்க்கெட்காரர், கொள்ளை லாபக்காரர், பேராசை வியாபாரி மூவரும் ஓர் அந்தரங்க அறையில் கதவைத் தாளிட்டுக் கொண்டு அதிக லாபம் அடிப்பதற்கு வழி என்ன என்று ஆலோசனை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அப்போது யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது. மூவரும் போலீஸோ என்று பயந்து நடுங்குகிறார்கள். ]

கள்ள மார்க்கெட்காரர் (பயந்தபடியே தாழ்ந்த குரலில்):—யார் அது?

விலைவாசி:—நான்தான்; உங்கள் தோழன்; குரல் தெரியவில்லையா?

பேராசை வியாபாரி:—கேட்ட குரலாகத் தான் தோன்றுகிறது. யாராயிருக்கலாம்?...

கொள்ளை லாபக்காரர் (மெதுவாகக் கதவைத் திறந்து கொண்டே):— அடடே! நீயா? வா ஐயா வா; யாரோ என்று பயந்து விட்டோம். நல்ல சமயத்தில் வந்தாய்.

விலைவாசி:—எதைப் பற்றி ஆலோசனை? என்ன சமாசாரம்?...

வியாபாரிகள்:—வியாபாரம் சுகமில்லை. எதையும் அதிக விலை வைத்து விற்க முடியவில்லை. சுதந்திர சர்க்கார் வந்தாலும் வந்தது. பதுக்கலோ, கள்ள மார்க்கெட்டோ, கொள்ளை லாபமோ ஒன்றுமே எங்களுக்குச் சாத்தியப்படவில்லை.

விலைவாசி:—ஏன் சாத்தியமில்லை? கள்ள மார்க்கெட்காரரர் கொஞ்சம் துணிந்து அரிசியைப் பதுக்கினால், உடனே விலைவாசியாகிய நான் தன்னால் உயர்ந்து விடுகிறேன். அதனால் எனக்கும் மதிப்பு உண்டு. உங்களுக்கும் லாபம் உண்டு. எப்படி என் யோசனை?

பதுக்கல் வியாபாரி:—பேஷ்! அதுதான் சரியான யோசனை! நாளைக்கே எங்கள் வேலையைத் தொடங்கி விடுகிறோம்.

[ விலைவாசி விடைபெற்றுக் கொள்கிறது. கறுப்பு வியாபாரிகள் அங்கிருந்து கலைந்து செல்கின்றனர்.]

### காட்சி 3.

[ திருவாளர் விலைவாசியார் ஜம்மென்று தர்பாரில் வீற்றிருக்கிறார். மிஸ்டர் கள்ள மார்க்கெட், ஸ்ரீமான் கொள்ளை லாபம், திருவாளர் பேராசை வியாபாரம் மூவரும் அவரைப் புடைசூழ்ந்து உட்கார்ந்திருக்கின்றனர்.]

மந்திரி:—பிரபு! தங்களைப் பேட்டி காணத் தெருவில் ஒரு தூதுகோஷ்டி காத்துக் கொண்டிருக்கிறது.

விலைவாசி:—தூதுகோஷ்டியா! யார் அது? மறுபடியும் என்ன தூதுகோஷ்டி?

மந்திரி:—உணவுப் பொருள்கள் தூதுகோஷ்டியாம்!

விலைவாசி:—வரச் சொல்.

அரிசியும் மிளகாயும்:—வணக்கம்; தயவு செய்ய வேண்டும்.

விலைவாசியார்:— மறுபடியும் என்னய்யா தயவு? மீண்டும் எதற்காக வந்தீர்கள்? நீங்கள்




சொன்னபடி தான் செய்து விட்டேனே? ஊரிலுள்ள ஏழை மக்களைப் பாருங்கள்! விலைவாசி உயர்ந்து விட்டது என்று கதறுகிறார்களே, காது கேட்க வில்லையா?

**சர்க்கரை:**—அதற்காகத்தான் வந்தோம். பாவம், அவர்களுடைய கஷ்டம் எங்களைப் பாகாய் உருக்குகிறது. விலைவாசி உயர்வு தாங்காமல் தொழிலாளர்களும், ஏழைக் குமாஸ்தாக்களும், நடுத்தர வகுப்பாரும் படும் அவஸ்தை கொஞ்சநஞ்சமல்ல. அரிசி முதல் கடுகு வரை எல்லாமே விலை ஏறிப் போனதால் அவர்களால் சமாளிக்க முடியவில்லை.

**விலைவாசியார்:**—அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?

**அரிசி:**—விலைவாசியாகிய தாங்கள் கொஞ்சம் தயவுசெய்து கீழே இறங்கி வரவேண்டும். இனி மக்கள் தாங்க மாட்டார்கள். தாங்களும் தாங்களும் இதுவரை பெற்ற வாழ்வும் புகழும் மதிப்பும் போதும்.

**விலைவாசி:**—அது என்னால் முடியாத காரியம். ஏறுவதற்குத்தான் எனக்குச் சக்தி உண்டு. இறங்குவதற்கு என்னால் முடியாது. இதோ இந்தக் கள்ள மார்க்கெட் வியாபாரிகளும் பதுக்கல் ஆசாமிகளும், பேராசை வியாபாரிகளும் அதற்கு ஒப்பமாட்டார்கள்... ஆமாம். விலைவாசி உயர்ந்து விட்டால் என்ன? ஏழைக் குமாஸ்தாக்களான என். ஜி. ஓ.க்களுக்கும், தொழிலாளர்களுக்கும் அது சௌகரியம் தானே? விலைவாசி உயர்வைச் சுட்டிக் காட்டி அதிகச் சம்பளம் போட்டுக் கொடுக்கும்படி சர்க்காரையும் மேலதிகாரிகளையும் இவர்கள் கேட்கலாம் அல்லவா?

**அரிசி:**—கேட்டுப் பார்த்து விட்டார்கள். இதுவரை ஒன்றும் பலிக்கவில்லை. சர்க்காரில் பணம் இல்லையாம்.... ஆகையால் ஏழைகளின் நிலைமைக்கு நாம்தான் இறங்க வேண்டும்.

**விலைவாசி:**—அது நம்மால் முடியாதே! சர்க்காரில் வேண்டுமானால் அதிக நோட்டுகள் அச்சடித்துப் பார்க்கட்டுமே.

**உணவுப் பொருள்:**—அதிக நோட்டுகள் அச்சடித்தால் பணப் பெருக்கம் அதிகமாகி விடுகிறது. அப்புறம் அதற்கேற்றாற்போல் விலைவாசியாகிய தாங்கள் இன்னும் மேலே போய் விடுவீர்கள்.

**விலைவாசி:**—அப்படியானால் விலைவாசியாகிய என்னைச் சர்க்காரால் கூடக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவர முடியாதா?

**உணவுப்பொருள்:**—அதைப்பற்றிச் சர்க்காரில் என்னவெல்லாமோ யோசனை செய்து பார்க்கிறார்கள். ஒன்றும் முடியவில்லை. நியாய விலைக் கடைகள் கூடத் திறந்து பார்த்தார்கள். பிரயோஜனப் படவில்லை.

**விலைவாசி:**—அடபாவமே! பின் என்னதான் செய்வது? என்னாலும் இறங்க முடியாது. சர்க்காராலும் என்னை இறக்க முடியாது. அப்புறம் உங்களையும் என்னையும் ஏழை மக்களையும் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்; போய் வாருங்கள்.

*[ தூதுகோஷ்டி வருத்தத்துடன் செல்கிறது. ]*

*(திரை)*


*Available in Seven Exciting New Shades*



# அபலை அஞ்சுகம்

## 9. மோக விழிப் பார்வையிலே......

பார்வதியம்மாள் தன்னையே கூர்ந்து நோக்கியது சொக்கனுக்குக் கஷ்டமாக இருந்தது. அவள் பிடியிலிருந்து தப்ப வழி தெரியாது அவன் தவித்தான்.

"எனக்கு இப்பொழுதும் நம்புவது கடினமாகத்தான் இருக்கிறது. நீ இவ்வளவு நாள் எங்கே இருந்தாய்? என்ன செய்தாய்? எப்பொழுது புறப்பட்டாய்? நீ வருவதற்கு முன்னால் ஒரு கடிதம் போட்டிருக்கக் கூடாதா?" என்றெல்லாம் பார்வதியம்மாள் வரிசையாகப் பல கேள்விகள் கேட்டுக் கொண்டே போனாள்.

அவளுடைய கேள்வி ஒவ்வொன்றுக்கும் சரியானபடி பதில் சொல்லிவிட முடியுமா என்பதுதான் சொக்கனுக்குச் சந்தேகமாக இருந்தது. முன்னேற்பாடு இல்லாமல் வேறு ஒருவருடைய வேஷத்தில் நடிப்பது எவ்வளவு கடினம்? சொக்கனின் தடுமாற்றத்தை உணர்ந்து கொண்டாள் நிர்மலா. இனி மேல் அவளுடைய சாமர்த்தியத்தால் தான் சமாளிக்க முடியும் என்பது போல் பரிதாபத்தோடு அவள் முகத்தைப் பார்த்தான் சொக்கன். அவ்வளவு கேள்விகளுக்கும் திடீரென்று சரியான பதிலே சொக்கன் சொல்லிவிட முடியாது என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அப்பொழுது பார்வதியிடமிருந்து சொக்கனைப் பிரித்துக் கொண்டு போவதுதான் நல்லது என்று அவளுக்குப் பட்டது.

"அவர் நாளைக் காலையில் உங்களிடம் எல்லாக் கதைகளையும் சொல்லுவார். அவர் நெடுந்தூரம் பிரயாணம் செய்ததால் மிகவும் களைப்பாக இருக்கிறார். நான் அவருக்கு ஆகாரம், படுக்கை முதலியவைகளை யெல்லாம் தயார் செய்கிறேன். நீங்கள் உங்கள் அறையில் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்" என்றாள் நிர்மலா.



''இல்லே!இல்லே!'' என்று தன் பலவீன மான குரலில் சொல்லிக் கொண்டே சொக்கனின் கையை முன்னிலும் அதிக கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் பார்வதி. ''நான் அவனோடு இருக்கி றேன். இப்பொழுது நான் அவனே விட்டு ஒரு நிமிஷம்கூடப் பிரிந்திருக்க முடியாது'' என்ருள் பார்வதியம்மாள்.

''அது சரி! ஆனல் நீங்கள் இவ்வளவு பலவீனமாக இருக்கும்போது அவர் உங்களோடு பேசிக் கொண்டிருக்க விரும்பவில்லே. நீங்கள் போய்ப் படுக் கையில் படுத்துக் கொள்ளுங்கள். அவர் சாப்பிட்டவுடன் வருவார். விவரமாக உங்களுக்கு எல்லாம் சொல்லுவார்'' என்ருள் நிர்மலா. பிறகு சொக்கனேப் பார்த்து, ''அம்மாவுக்கு அதிக சிரமம் கொடுக்காமல் நடந்து கொள்ளவேண்டு மென்பதுதான் என் கவலே. அவர் களுக்கு அதிக சிரமம் கொடுத்தால்



உடல் நிலே மோசமாகி விடும் என்று டாக்டர் கண்டிப்பாக எச்சரிக்கை செய்திருக்கிருர்'' என்ருள்.

இதைக் கேட்டதும் சொக்கன் அவ ளுடைய அபிப்பிராயத்தை அனுசரித் தவன் போல், ''ஆமாம், பெரியம்மா! நீங்கள் போய்ப் படுக்கையில் படுத்துக் கொள்ளுங்கள். இதோ போய் நான் சாப்பிட்டு விட்டு வந்து விடுகிறேன்'' என்று கூறினன்.

நிர்மலாவும், ''வாருங்கள் சொல் கிறேன். நானே உங்களே உங்கள் அறை யில் கொண்டு விட்டுவிட்டு வருகிறேன்'' என்று சொல்லிப் பார்வதியின் கையைப் பிடித்து இழுத்து அவளேப் படுக்கை அறைக்கு அழைத்துக் கொண்டு போனுள். பாசத்தாலும் ஆர்வத்தா லும் உணர்ச்சி பரவசமாகி நின்ற பார்வதி அங்கிருந்து எழுந்து செல்ல மனமில்லாதவளாய், ''கண்ணே! சாப் பிட்டு விட்டுச் சீக்கிரம் வந்துவிடு. உன் னேயே நான் எதிர்பார்த்துக் கொண் டிருப்பேன்'' என்றுசொல்லிக்கொண்டே தள்ளாடியபடி நடந்தாள்.

பார்வதியை அவள் அறையில் கொண்டுபோய் விட்டு விட்டு வந்தபின் நிர்மலா சொக்கனேப் போஜனத்திற் காகச் சமையல் அறைக்கு அழைத்துக் கொண்டு போனுள். சொக்கன் அந்தச் சமயத்தில் நிர்மலா திடீரென்று தன்னே விஜயரங்கன் என்று பார்வதியிடம் சொல்லியதைப் பற்றி விசாரிக்க எண்ணினன். ''இதென்ன! திடீரென்று முன்னெச்சரிக்கை இல்லாமல் என்னே விஜயரங்கனுக்கி விட்டாய்? நீ பெரிய எமகாதகியாக இருப்பாய் போலிருக் கிறதே? என்னே இப்படித் திடீரென்று சிக்க வைப்பாய் என்று நான் நினேக் கவே யில்லே—எல்லாம் பெரிய சாக சமா யிருக்கிறதே? உன் அபிப்பிராயம் தான் என்ன?'' என்ருன் சொக்கன்.

''என் அபிப்பிராயத்தை எல்லாம் சொல்லுகிறேன். இப்பொழுது அதற் குச் சந்தர்ப்பம் இல்லே. முதலில் அந்தக் கிழவியைத் தூங்க வைக்க வேண்டும். அப்புறம் நாம் சாவகாசமாகப் பேசிக் கொள்வோம்'' என்ருள் மெதுவான குரலில் நிர்மலா.

''அந்தக் கிழவியைத் தூங்க வைக்க வேணுமா? அவளேத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டுப் பாடணுமா?'' என்ருன் சொக்கன் மெதுவாக.

''ஆமாம்! அப்படித்தா னிருக்குது. ஒவ்வொரு நாளும் அந்தக் கிழவியை நான் தூங்க வைக்கப் படும் பாடு.... அப்பப்பா! சொல்லி முடியாது'' என் ருள் நிர்மலா.

''அப்படின்னு நீ நல்லா பாடுவாயா..? இவ்வளவு அழகாக இருக்கும் உனக்குப் பாடவும் வரும்னு மயிலுக்குக் குயிலின் குரல் அமைந்தாற்போல்..''

''ரொம்ப வர்ணிக்காதீங்க. ஏதோ பாடுவேன். ஆனல் நன்ரு யிருக்காது'' என்ருள் அவள் பொற்கொடி துவளுவது போல் உடலே நெளித்துக்கொண்டே.

''பாட்டு வரும்னு போதும். நல்லா இருக்கு, இல்லேங்கிறது சங்கீத விஷயம். அதுங்கிட்டே நாம் ஏன் போகணும்..?'' என்ருன் சொக்கன் சிரித்துக்கொண்டே.

''நீங்க ரொம்பக் கேலியாகப் பேசு றீங்க. இப்படிப் பேசுகிறவங்களேக் கண்டால்தான் எனக்கு ரொம்பப் பிடிக் கும். ஆனல் இப்போ இதுக்கெல்லாம் நேரமில்லே. முதலில் அந்தக் கிழத் தைத் தூங்க வைத்து விட்டால்...'' என்ருள் அவள். முகத்தில் தோன்றிய வெட்கம், நாணம், ஆவல், குறும்பு



முதலிய உணர்ச்சிகள், வானவில் ஒரே சமயத்தில் பல வர்ணங்களைக் காட்டுவது போல் இருந்தன.

அவன் ஒன்றும் பேசவில்லை. அப்பொழுது அவன் தன் சுய உணர்ச்சியை இழந்து விட்டான் என்றுதான் சொல்ல வேண்டும். அவன் ஏதேனும் துணிந்து பேசுவோம் என்ற எண்ணத்தில் இருந்தாலும் நிர்மலாவின் மதியை மயக்கும் அழகு அத் துணிவை அடக்கி விடு

வதாக இருந்தது. அப்பொழுது அவனிடம் ஓரளவு அவன் மயங்கி விட்டான் என்றே சொல்ல வேண்டும். அவன் ஒரு பொம்மையாக இருந்தான். அந்தப் பொம்மையை ஆட்டி வைக்கும் விசை நிர்மலாவின் கையில் இருந்தது. அப்பொழுது அவன் ஏதோ மின்சார சக்தியால் உந்தப்படுகிறவன் போல் அவள் எதைச் சொல்லுகிறளோ அதன் படி செய்யச் சித்தமாக இருந்தான். அவளுடைய மனத்தைக் கவரும் உருவம் தான் அவனை இப்படிச் செய்தது என்று சொல்ல வேண்டும்.

சொக்கன் சாப்பிட்டவுடன் அவனை அழைத்துக் கொண்டு பார்வதியின் படுக்கை அறைக்குள் சென்றுள் நிர்மலா. அவர்கள் அந்த அறையில் நுழைந்த காலடி ஓசையைக் கேட்டவுடன் பார்வதி ஆர்வத்துடனும் ஆசையுடனும், ''விஜயனு? வா கண்ணே! வா! இப்படி உட்காரு!'' என்றுள்.

சொக்கன், ''இதோ வந்து விட்டேன், பெரியம்மா!'' என்று அன்போடும் ஆவலோடும் நடந்து கொள்கிறவன் போல் பேசிக்கொண்டே கட்டிலில் அவளுக்குச் சமீபமாகப் போய் உட்கார்ந்தான்.

நிர்மலா அங்கு அலமாரியில் இருந்த பாட்டில் ஒன்றில் இருந்த மருந்தை அவுன்ஸ் கிளாஸில் ஊற்றி, ஏதோ ஒரு மாத்திரையை எடுத்து அந்த மருந்தில் போட்டாள். அது மருந்தில் போட்டவுடனேயே கரைந்து விட்டது. உடனே அவள் அதைப் பார்வதியிடம் கொடுத்து, ''இதோ உங்களுக்கு மருந்து கொண்டு வந்திருக்கிறேன். மிகவும் களைப்பாக இருக்கிறீர்கள். சாப்பிட்டுவிட்டு இவருடன் மெதுவாகப் பேசிக்கொண்டே இருங்கள்'' என்றுள்.

பார்வதி அந்த மருந்தை வாங்கிச் சாப்பிட்டாள். ஆனல் சில விஞடிகளில் மயக்கம் வந்தவள் போலக் கண்களை மூடிக் கொண்டு படுக்கையில் படுத்தாள். சொக்கனுக்கு இது ஆச்சரியமான காட்சிகளுக்குப் பின்னல் தொடர்ந்து ஆச்சரியமான காட்சிகளாக வரும் ஒரு நாடகத்தைப் போலத்தான் இருந்தது. அந்த நிகழ்ச்சிகளைக் கண்ட அவன் பரபரப்போடு நிர்மலாவின் முகத்தைப் பார்த்தான். அவள் அவனைத் தன்னேடு வரும்படி ஜாடை காட்டிஞள். அவன்தான் அவள் கை விசையில் சுற்றும் பொம்மை ஆயிற்றே? அவள் ஆக்ஞைக்கு உட்பட்டவஞக எழுந்து நடந்தான். அவள் வெளியே வந்து அந்த அறைக் கதவை மெதுவாகச் சாத்திவிட்டு அவனைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றுள்.

அவள் அறைக்குச் சென்றதும் அங்கிருந்த கட்டிலில் உட்கார்ந்து சாய்ந்த வண்ணம் ஏதோ மோக லாகிரியில் அவனை ஆழ்த்துவதற்கு நினைப்பவள் போல் ஒரு தினுசாகப் பார்த்தாள். ஆனல் அப்பொழுது அவன் அந்தக் கண் பார்வையின் அர்த்தத்தை உணர்ந்து கொள்ளும் வகையில் இல்லை. அவனுடைய சிந்தனையெல்லாம் வேறு விதமாக இருந்ததுதான் அதற்குக் காரணம். ''நீ அந்த மருந்தில் போட்டாயே, அந்த மாத்திரை என்ன மாத்திரை? நீ மிகவும் துணிகரமாகக் காரியங்கள் செய்வாய் போலிருக்கிறதே? அந்தக் கிழவியை நீ என்ன செய்யப் போகிருய்? எனக்குப் பயமாக இருக்கிறதே? இதிலெல்லாம் என்னையும் சம்பந்தப்படுத்தி....?'' என்று சந்தேகத்துடன் இழுத்தான்.

அவள் அதைக் கேட்டதும் அலட்சியமாகவும், குறும்பாகவும் ஒரு புன்முறுவல் பூத்தாள். அந்தச் சமயத்திலும் அவள் அழகிய கண்களில் மோகலாகிரி மிதந்தது. அவளுடைய மார்பு விம்மித் தாழ ஒரு பெருமூச்சு விட்டாள். அப்பொழுது அவள் நடித்த நடிப்பு — காதலாட்டம் — அவளுடைய எழிலில் எந்த மனிதனையும் மயக்க வைப்பதாய்த்தான் இருந்தது. ''அதுவா? ஒன்றுமில்லை. தூக்க மாத்திரை. அதைப் பற்றி நீங்கள் பயப்பட வேண்டாம். கவலைப்படவும் வேண்டாம். நமக்குள் இன்றிரவு எவ்வளவோ பேசிக்கொள்ள இருக்கிறது. அந்தக் கிழவி சாதாரண நாட்களிலேயே எளிதில் தூங்குவதில்லை. அதுவும் நீங்கள் வந்திருப்பதனல், இரவெல்லாம் அவளுடைய தொல்லையே பெரிதாக இருக்கும். அதற்காகத்தான் அந்த மாத்திரையைக் கொடுத்தேன். அவள் நிம்மதியாகத் தூங்கிக் காலையில் எழுந்து விடுவாள். உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை'' என்று சொல்லி மெதுவாக அவன் கைகளைப் பிடித்துத் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டாள் நிர்மலா.

அப்பொழுதுதான் சொக்கன் அவளுக்கு இருக்கும் உணர்ச்சி எப்படிப்பட்டதாக இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டான். மலர் போன்ற அவள் கரம் பட்டதுமே அவன் தன் நிலைவையே பறி கொடுத்தவன் போலாகி விட்டான். அவளுடைய கட்டுக்கு அடங்காத பெண்மையின் பேரெழில் அவனைச் சுலபமாக அடிமை கொண்டு விட்டது. அந்த இரவு வேளையில் அந்த வீட்டில் அவன் தனிமையில் ஒரு அழகிய பெண்ணேடு இருப்பது ஏதோ மாய லோகத்துக்கு வந்து.



● தஞ்சை ஜில்லா தப்பளாம் புலியூர் பிரபல மிராசுதாரும் ஆஸ்திகரும் தர்மிஷ்டருமான **ஸ்ரீ வி. ராமஸ்வாமி சாஸ்திரிகள்** தமது 77-வது வயதில் 15-8-1956-ந் தேதி யன்று அமரத்வம் எய்தினர்.

---

## 1856 - நூறு ஆண்டுகள் சேவை - 1956

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜூலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

**மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்**

| **சென்னையிலிருந்து** | **நாகப்பட்டினத்திலிருந்து** |
|---|---|
| **1956 செப்டம்பர் 12** | **1956 செப்டம்பர் 13** |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளையும், "பர்த் வசதியற்ற டிக்கட்டுகளையும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜூலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பெர்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புளோயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும், சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

*பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்*

| **பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட்** | **மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்** |
|---|---|
| **7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1** | **முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்** |

காணாத இன்பத்தைக் கண்டு அனுபவிப்பது போல்தான் இருந்தது. அந்தச் சமயத்தில் அவள் தன் மயக்க நடிப்பினால் அவனை மோகப் பாதையில் அழைத்துச் சென்றாலும், அந்த வீட்டில் அவளுடைய கூட்டுறவோடு ஏதோ அபாயகரமான காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கிறோம் என்கிற நினைவும் பயமும் அவன் மனத்தில் அடிக்கடி தலைநீட்டிக் கொண்டுதான் இருந்தன.

அவள் தன் காதலாட்டத்தினாலேயே அவனைத் தான் எத்தகைய மோசக் கருத்தான பாதையில் அழைத்துக் கொண்டு போகிறோம் என்பதை அவன் உணராதிருக்கும்படி செய்தாள். ''நீங்கள் ரொம்பச் சாமர்த்தியசாலி. நீங்கள் என் மனத்திலுள்ளதை மிகத் தந்திரமாகப் புரிந்து கொண்டு விட்டீர்களே? உங்களுக்கு ஏற்கனவே சினிமாவிலோ, நாடகத்திலோ நடித்துப் பழக்கமோ? உங்களைப் போல் வேறு எவராலும் அந்தக் கிழவியிடம் அவ்வளவு நன்றாக நடித்திருக்க முடியாது'' என்றாள்.

சினிமா என்ற பேச்சை எடுத்ததும் சொக்கனின் உணர்ச்சித் தீயில் மேலும் ஒரு கிண்ணம் நெய்யை ஊற்றியதுபோலிருந்தது. ''என்னைப் பார்த்ததும் நான் ஒரு சினிமாநடிகனாக வேண்டியவன் என்று நீ தெரிந்து கொண்டாய், பார். அதுதான் உன் சாமர்த்தியம். நான் சினிமாவிலோ, நாடகத்திலோ இதுவரையில் நடித்ததில்லை. ஆனால் எனக்கு நன்றாக நடிக்கும் திறமை உண்டு. சினிமாவில் சேரலாம் என்ற உத்தேசம் தான். ஆனால் எனக்கு வாய்ப்புத்தான் கிடைக்கவில்லை'' என்றான் சொக்கன்.



''சந்தேகமேயில்லை. உங்கள் சாமர்த்தியம் தான் உங்களுக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுத்திருக்கிறது. சினிமாவில் நடிக்க வாய்ப்பு கிடைக்காவிட்டால் போகிறது. அந்தக் கிழவியின் சொத்துக்களுக்கு இனிமேல் நீங்கள் தான் வாரசு. அந்த வாய்ப்பு இருக்கிறது. நீங்களே சொந்தமாகப் படம் பிடிக்கலாம். அதில் நீங்களே கதாநாயகனாக நடிக்கலாம். நான் கதாநாயகியாக நடிக்கிறேன். கவலைப்படாதீர்கள்! உண்மையாகச் சொல்லுகிறேன். வேறு எந்த மனிதனும் உங்களைப் போல் இவ்வளவு சாமர்த்தியமாக நடந்து கொண்டிருக்க முடியாது. இதனால் நானும் பெரிய பாக்கியம் செய்தவளாகிவிட்டேன். உங்களை நான் மாலையில் பார்த்ததிலிருந்து என் மனத்தில் எத்தகைய எண்ணம் ஏற்பட்டுவிட்டது தெரியுமா..? கிழவியின் அளவற்ற சொத்துக்களை அடைய வேண்டும் என்பதற்காக மட்டும் நாம் கூடவில்லை... உண்மையாக மனத்தில் எழுந்த காதலை நாம் துண்டித்து எறிந்து விட முடியாதல்லவா?'' என்று சொல்லிக் கொண்டே மெதுவாக அவன் தோளில் சாய்ந்தாள். அவள் விரித்த காதல் வலையில் சிக்குண்ட அவன் உலகத்தையே சில நிமிடங்கள் மறந்து விட்டு நிர்மலாவின் ஆட்டங்களுக்குப் பணிந்ததில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது?

போதை மயக்கம் தெளிந்தவன்போல் அவன் விழித்துக் கொண்டு விட்டான். ''எப்படியோ நான் இன்னொரு மனிதனைப் போல் நடிக்க வேண்டியிருக்கிறது. இது எப்படியும் அபாயமானதுதான். உனக்கு நான் இப்படி அடிமையாகி விடுவேன் என்று நினைக்கவில்லை. அந்தக் கிழவியிடம் அவளுடைய தங்கை பிள்ளை நானென்று சட்டென்று அந்தச் சமயத்தில் சொல்ல உனக்கு எப்படித்தான் தோன்றியதோ! என்ன துணிச்சல்? என்னை இப்படித் திடீரென்று சிக்க வைப்பாய் என்று நான் நினைக்கவேயில்லை.—ஏ அப்பா! பெண்களே இப்படித் தான் போல் இருக்கிறது'' என்றான் அவன் அலுப்படைந்தவன் போல.

''துணிவில்லாதவர்கள் யாராவது வாழ்க்கையில் வெற்றி அடைந்திருக்கிறார்களா...? கூடத்தில் மாட்டியிருக்கும் படத்தில் இருப்பது உங்களைப் போன்ற உருவம் என்பதை நீங்கள் மறந்துவிட வேண்டாம். இது ஆயிரத்தில் ஒருவருக்குக் கிடைக்க வேண்டிய அதிர்ஷ்டம்! இதை இழந்து விடக் கூடாது. இந்தச் சொத்து சாதாரணமானதல்ல. அதன் கணக்கு என்னிடம் இருக்கிறது. குறைந்தது முப்பது லக்ஷம் ரூபாயாவது இருக்கும்.

அந்தப் பணம் நமக்குக் கிடைத்தால் நாம் எப்படி வாழலாம் — எவ்வளவு சினிமா எடுக்கலாம் என்பதை எல்லாம் மறந்துவிடக் கூடாது. கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அது கிடைப்பதாக இருந்தால் இந்தச் சிரமமெல்லாம் நமக்குப் பெரிதல்ல'' என்ருள் நிர்மலா மோக விழிப் பார்வையைச் சொக்கன்மீது செலுத்திக்கொண்டே.

இவ்வளவு பணம் கிடைப்பது அதிர்ஷ்டம்தான். ஆனல் அவன் எதிலும் தன்னிச்சையாக நடக்க விரும்பினன். ஒரு பெண்ணின் நயவஞ்சகமான வார்த்தைகளை நம்பி ஏதேனும் ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிக் கொள்ள நேருமோ என்ற பயம் அவனுக்கு இருந்தது. கெடுதலான காரியங்களைச் செய்ய மனிதர்களைத் தூண்டும் நிர்மலா போன்ற அழகிய பெண்களை நம்புவது கடினம் என்று அவனுக்குத் தோன்றியது. அவளுடைய மயக்கும்அழகு, தேனென இனிக்கும் பேச்சு, அன்பு காட்டுவது போன்ற நடிப்பு எல்லாம் ஏதோ அபாயத்தில் அவனைச் சிக்க வைத்து விடும் போல்தான் தோன்றியது.



''நாம் அவ்வளவு சுலபமாக அந்தச் சொத்துக்களை அடைந்து விட முடியாது. ஒரு நாள் உண்மை விளங்கினல் அது பெரிய ஆபத்தில்தான் வந்து முடியும். நான் அந்த விஜயரங்கனைப் போல் நடிப்பதற்கு அவனைப் பற்றிய விஷயம் எதுவுமே எனக்குத் தெரியாது. அவன் எப்படிப் பட்டவன், அவனுடைய குணங்கள் எப்படி, அவனுடைய வாழ்க்கை, அவனுடைய உறவினர், அவனுக்கும் இந்தக் கிழவிக்கும் உள்ள தொடர்பு, இவர்களுக்குள் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எதுவுமே கொஞ்சங்கூட எனக்குத் தெரியாது. அப்படி இருக்கும்போது நான் எப்படிச் சாமர்த்தியமாக விஜயரங்கனைப் போல் நடிக்க முடியும்? ஒரு வேளை இந்தக் கிழவியை நாம் ஏமாற்றி விடலாம் என்ருலும் இந்தக் குடும்பத்துக்கு அறிமுகமானவர்களை நாம் ஏமாற்றிவிட முடியுமா? அவனைப் பற்றிய விஷயங்களைச் சொல்லும் கடிதங்கள் ஏதேனும் இருந்தாலும் செளகர்யமாயிருக்கும்'' என்ருன் அவன் சிறிது அலுப்பும் அவநம்பிக்கையும் நிறைந்த குரலில்.

''அதைப் பற்றி நீங்கள் பயப்பட வேண்டாம். நான் ஒருத்தி இருக்கிறேனல்லவா? எனக்குத் தெரியும். அந்த விஜயரங்கனைப் பற்றிய விஷயங்களெல்லாம். அவற்றை நான் உங்களுக்குச் சொல்ல மாட்டேனு? அந்தக் கிழவி அவனைப் பற்றித் திருப்பித் திருப்பி எவ்வளவோ சொல்லி இருக்கிருள். அவைகளைத் தவிர, அவனிடமிருந்து வந்த சில கடிதங்களையும் வேறு சில ஆதார பூர்வமான தஸ்தாவேஜிகளையும் நான் வைத்திருக்கிறேன். அவைகளைக் கொண்டு யாரையும் நாம் சுலபமாக ஏமாற்றி விட முடியும். இனி மேல் நீங்கள் உண்மை விஜயரங்களுகவே ஆகி விடுங்கள். ஐந்து வருட காலமாக இந்தக்குடும்ப விவகாரங்களைப் பற்றிய விவரங்களெல்லாம் என் கையில் இருக்கும்போது நீங்கள் ஏன் பயப்பட வேண்டும்?'' என்ருள்.

''உண்மையான விஜயரங்கன் என்னவாளுன் என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? ஏன், அவன் ஒரு நாள் திடீரென்று திரும்பி வந்து நம் சூழ்ச்சிகளை அம்பலமாக்கி, நம்மைச் சிறையில் தள்ளி விட்டால் என்ன செய்வது?'' என்ருன் சொக்கன் சந்தேகத்தோடு.

''அவன் முன்னறிவிப்பு இல்லாமல் திடீரென்று இங்கு வந்து விட மாட்டான். இந்தக் கிழவி பார்ப்பதற்கு முன்னல் வரும் எல்லாக் கடிதங்களையும் நான்தான் படித்துப் பார்க்கிறேன். அவன் சிங்கப்பூரில் இருக்கிருன். அவன் வருவதாக இருந்தால் நமக்கு முன்னதாகவே கடிதம் எழுதாமல் இருக்க மாட்டான். அப்பொழுது நாம் அதற்குத் தகுந்தாற்போல் ஏற்பாடு செய்து கொள்ளலாம்'' என்ருள் நிர்மலா.

இதைக் கேட்டதும் சொக்கன் சந்தேகத்தோடு நிர்மலாவின் முகத்தைப் பார்த்தான். ஆனல் அவள் பார்வை எப்பொழுதும்போல் சாதாரணமாகவே இருந்தது.

''அவன் வந்தால் என்ன ஏற்பாடு செய்து கொள்ளலாம் என்று நீ சொல்லுகிருய்? அட கடவுளே! நீ எல்லாவற்றுக்கும் துணிந்த பெண்ணுக இருப்பாய் போல் இருக்கிறதே? நான் ஆரம்பத்தில் நீ இவ்வளவு துணிகரமானவளாக இருப்பாய் என்று நினைக்க

வில்லை... நான் யோக்கியன் இல்லை. நான் திருட்டுக் கூட்டத்தைச் சேர்ந்தவன் தான். ஆனால் நானும் ஒரு அளவோடு தான் எதையும் செய்வேன், நிர்மலா!'' என்றான் சொக்கன்.

நிர்மலா சொக்கன் விழித்துக் கொண்டு விட்டான் என்பதை உணர்ந்து கொண்டாள். இருந்தாலும் அவனை வசப்படுத்தி விடலாம் என்ற தைரியம் அவளுக்கு இருந்தது. அவனுடைய தோளில் மெதுவாகச் சாய்ந்து கொண்டு மறுபடியும் விழிகளால் விழுங்கி விடுவது போல் அவனைப் பார்த்தாள். மித மிஞ்சிய பெண்மையின் அழகும் காதல் உணர்ச்சியும் அவனை நிலைகுலைய வைத்தன. நிர்மலாவின் இனிமையோடும் கொஞ்சுதலோடும், குழைவோடும் கூடிய வார்த்தைகளும் அவனைத் திகைத்துத் தடுமாற வைத்தன.

''இதை நினைத்துப் பாருங்கள். லக்ஷக் கணக்கான ரூபாய்கள்... என் மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? காதல் இல்லையா? உங்களுடைய சுக துக்கங்களில் எனக்கும் பங்குண்டல்லவா? இத்தகைய சந்தர்ப்பத்தை நழுவ விட்டால் அப்புறம் நாம் வாழ்ந்து புண்ணியமில்லை. நான் ஏதோ கொடுமையான காரியங்களைச் செய்யத் துணிந்து விட்டதாக நினைக்க வேண்டாம். நிச்சயம் எனக்குத் தெரியும், அந்த விஜயரங்கன் திரும்பி வரப் போவதில்லை என்று. நான்கு வருடங்களாக நடந்த உலக யுத்தத்தில் அவன் என்ன ஆனானோ? இந்தக் கிழவியும் அவன் எங்கு இருக்கிறான் என்பதை அறிவதற்காக எவ்வளவோ பணம் செலவு செய்து பார்த்து விட்டாள். அவனைப் பற்றிய தகவலே கிடைக்கவில்லை. நான் விசாரித்துப் பார்த்த அளவில் அவன் இறந்து விட்டான் என்று நம்பத்தகுந்த செய்திகள் கிடைத்திருக்கின்றன'' என்றாள் நிர்மலா.

'' கடவுள் அப்படியே அவன் இறந்து விட்டதாகவே செய்யட்டும். அப்படி அவன் திரும்பி வந்து விட்டால் நமக்கு ஏற்படக்கூடிய ஆபத்து எப்படிப்பட்டது என்பதை நான் உனக்குச் சொல்ல வேண்டாம்'' என்று சொல்லி அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டான். பிறகு தொடர்ந்து, '' சரி இருக்கட்டும், பார்ப்போம். நாமும் துணிந்து இந்தக் காரியத்தில் இறங்கி விட்டோம். எந்தச் சமயத்திலும் நீ எனக்கு உதவியாக இருக்க வேண்டும் என்பதை மாத்திரம் நீ மறந்து போய் விடாதே'' என்றான்.

'' என்மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? உங்களை நான் தவிக்க விடுவேனா? இந்த விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்றாள் நிர்மலா. (தொடரும்)

# ஆபரணங்கள் அவசியமா?

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

பெண்கள் ஒருவருக்கொருவர் எழுதும் கடிதத்தில் ஆடை, ஆபரணத்தைப் பற்றி ஒன்றுமே வரவில்லையே என உன் கணவர் கேலியாகக் கேட்டதாக எழுதியிருந்தாய். காலம் மாறிப் போய்விட்டது என்று அவரிடம் சொல்லு. பெண்களுக்கு அவற்றைத் தவிர அநேக விஷயங்கள் தெரியும். இன்றையப் பெண்கள் அறிவு ஆற்றலில் சிறந்தவர்களாக இருக்கிறார்கள். மிகச் சிறிய அளவில் குறைகள் இருப்பதைப் பெரிதாக நினைக்கக் கூடாது. பெண்களைப் பற்றி எழுதுவதென்றால் சிலர் நகைக்கடை, புடவைக்கடை இவைதான் தெரியுமென நினைத்து அதைப் பெரிய ஹாஸ்யமாக எழுதுகிறார்கள். அது வருந்தத்தக்கது.

பெண்களுக்கு நகை கொடுக்கும் அழகை விடப் புன்னகைதான் அழகை அள்ளிக் கொடுக்கும். விலைமதிப்புள்ள ஆபரணங்களைப் போட்டுக் கொண்டு கோபமாக, சிடுசிடுப்பாக இருப்பது நன்றாக இல்லை. எவ்வளவோ அலங்காரம் இருந்தும் அந்தத் தோற்றத்தில் ஒரு குறைவைக் காண்கிறோம். திருவள்ளுவர் துன்பத்திலும் நகைக்கும்படி கூறினார். விவேகானந்தர் கஷ்டம் வந்தபோது கூடச் சிரிக்கச் சொன்னார். சகுந்தலையின் முகத்தில் மலர்ச்சி இருந்ததால், காட்டுமலர்கள் கூட அவளுக்கு அழகைக் கொடுத்தன.

நகைகள் போட்டுக் கொள்வதை நான் தவறாகச் சொல்லவில்லை. மங்களகரமாக இருப்பதற்காக நகைகள் ஓரளவு போட்டுக் கொள்ளலாம். வசதியுள்ளவர்கள் நிறையப் போட்டுக் கொள்ளட்டும்! ஆனால் வசதியில்லாதவர்கள் நகைகள் இல்லையே என ஏங்கித் தவிக்க வேண்டிய அவசியமில்லையல்லவா? ஒரு பெண் தன் வாழ்க்கையில் இன்றியமையாத பொருள் நகைகள்தான் எனக் கருதும் மனப்பான்மை ஒழிய வேண்டுமானால், பெண் சமூகம் அந்த மனப்பான்மையை மாற்ற முயல வேண்டும்.

மதிப்புக்குரிய ஒரு சகோதரி மிகவும் வருத்தத்துடன் ஒரு அனுபவத்தைச் சொன்னார். ஒரு வீட்டில் நடந்த பெரிய விசேஷத்தில் வைரத் தோடில்லாத ஒரு அம்மாளைக் காவற்காரன் வெளியே பிடித்துத் தள்ளிவிட்டானாம். அந்த அம்மாள் நகையில்லாத குறையினால் தனக்கு இவ்வளவு அவமதிப்பு ஏற்பட்டது என்றாராம். இதைக் கேட்டு இந்தச் சகோதரிக்கு மனம் புண்ணாகியது. இதை மிகுந்த வேதனையுடன் என்னிடம் அந்தச் சகோதரி கூறினார்.

நான் வற்புறுத்திச் சொல்வதெல்லாம் நகைகள் விசேஷமாக இல்லாதவர்கள், நிறைய இருப்பவர்கள் அனைவரும் சமூகத்தில் சம நிலை பெற வேண்டும் என்பதுதான். இல்லாதவர்களுக்கு அவமதிப்பு ஏற்படும் போது எப்பாடு பட்டாவது நகை வாங்கிக் கொள்ள வேண்டும் என்று நினைக்கத் தோன்றுகிறது. அதை ஒட்டிப் பல குடும்பங்களில் பல தவறுகள் நேர்ந்திருக்கின்றன.

இந்த ஒரு காரணத்தில் சிலர் போலி நகைகளை வாங்கிக் குவிக்கிறார்கள். அது அநாவசியச் செலவு. விலை மதிப்புள்ள ஆபரணங்களாவது ஆபத்தில் உதவும். படாடோபத்துக்காகப் போலிகளை வாங்குவது நாகரிக உலகில் இடம் பெறுகின்றன.

வயதுக்கேற்ற அலங்காரம் என ஒன்று இருப்பதை மறந்து விடுவது கேலிக்கூத்தாகிறது. அலங்காரம் மனத்துக்கு ஒருவித திருப்தி அளிக்கிறது என்பது உண்மைதான். ஆனால் அதே சமயம் பிறருக்கும் பார்க்க ரம்மியமாக இருக்க வேண்டும் அல்லவா? பெண்கள் வயதை மறைக்க விரும்புவது இயல்புதான். அது அமெரிக்கா போன்ற முற்போக்கான நாடுகளிலும் இருக்கிறது.

குடும்பத் தலைவி, குழந்தைகளுடைய தாய், மதிப்புள்ள கணவனின் மனைவி என்றெல்லாம் அந்தஸ்தை அடைந்த ஒருவர் தன் அலங்காரத்தையும் மதிப்புக்குரியதாகச் செய்து கொள்வதுதான் சரியாகும். சில பெண்கள் புது மோஸ்தருக்காக நகைகளை அடிக்கடி மாற்றிச் செய்து கொள்ளுகிறார்கள். அதுவும் அவசியமான செலவல்ல.

பெற்றோர்களுக்குத் தங்கள் குழந்தைகளிடம் அன்பு இருப்பது இயல்புதான். ஆனால் குழந்தைகளிடம் வைத்திருக்கும் அன்பை மானசீகமாக வைத்துக்கொள்ள வேண்டும். அன்பு மிகுதியில் கண்மூடித்தனமாகப் பணத்தைக் கொட்டிப் பல நகைகளைச் செய்து குழந்தைகளுக்குப் போட்டு அழகு பார்க்க விரும்புவது அந்தக் குழந்தைகளின் உயிருக்கே ஆபத்தாக முடிகிறது என்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அதுவும் குழந்தைகளுக்கு நகைகளை நிறையப் போட்டுப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதனால் விளையும் விபத்துக்களைப் பத்திரிகைகளில் அடிக்கடி பார்க்கிறோம். அந்த விஷயத்திலும் சகோதரிகள் ஆசையை மட்டுப் படுத்திக் கொள்ளத்தான் வேண்டும்.



வடநாட்டுச் சகோதரிகளிடையே நகை மோகம் குறைவாக இருப்பதை நீயும் குறிப்பிட்டு எழுதியிருந்தாய். நானும் சில வடநாட்டுச் சகோதரிகளிடம் பழகி வருவதால் உன் கருத்தை முழு மனத்துடன் ஆமோதிக்கிறேன்.

இப்படிக்கு,

— பூமாதேவி



## ஜனாதிபதியின் அலுவல்கள்

ஜனாதிபதி ராஜன் பாபு சுதந்திர தின விழாவை முன்னிட்டுச் சென்னைக்கு விஜயம் செய்தபோது பல முக்கிய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்.

1. சென்னை சௌகார்பேட்டையில் ஸ்ரீ ஜெயின் வைத்திய உதவி சங்கத்தாரால் சிறப்பாக நடத்தப்பட்டுவரும் தேவராஜ் மாணிக்சந்த் மருத்துவ ஆஸ்பத்திரிக்கு விஜயம் செய்தார். ஜனாதிபதியையும் மேற்படி சங்கத்தின் கௌரவக் காரியதரிசி ஸ்ரீ லால்சந்த் தாதாவையும் காணலாம்.

2. மவுண்ட்ரோடிலுள்ள விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட் காட்சிசாலையில் உள்ள பொருள்களைச் சுற்றிப் பார்வையிடுகிறார்.

3. தியாகராயநகர் தட்சிண பாரத ஹிந்தி பிரசார சபையில் ஆகஸ்டு 17-ல் நடைபெற்ற இருபத்தோராவது ஆண்டு பட்டமளிப்பு விழாவில் கலந்து கொண்டு பட்டமளிப்பு விழாப் பிரசங்கம் புரிந்தார். படத்தில் ஸ்ரீ ராஜன் பாபு, ஸ்ரீ பிரகாசா, ஹிந்தி பிரசார சபை பொதுக் காரியதரிசி ஸ்ரீ சத்தியநாராயணா மூவரையும் காணலாம்.



# நாட்டுக்கு நல்லது

சென்ற மாதம் நாலாம் தேதி தஞ்சை ஜில்லா பாபநாசம் தாலூகாவைச் சேர்ந்த சந்திரசேகரபுரம் என்னும் கிராமத்துக்குப் போயிருந்தேன். அங்கு ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டேன்.

ஐயாயிரம் மன்னர்கள் அவ்விடத்தில் குதூகலத்துடன் கூடியிருந்தார்கள்.

என்ன? மன்னர்களா? அவ்வளவு பேரும் எதற்காகக் கூடி யிருந்தார்கள்?

ஆமாம். கவியரசர் பாரதியார் வாக்குப்படி எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள்தானே!

அத்தனைபேரும் ஒரு கூட்டுறவுப் பண்டகசாலையின் ஆண்டு விழாவுக்காக அங்கு வந்து கூடி யிருந்தார்கள்.

இதென்ன ஆச்சரியம்? ஒரு கூட்டுறவுப் பண்டகசாலையின் ஆண்டு விழாவுக்கு ஐயாயிரம் பேரா வந்து கூடியிருந்தார்கள்?

ஆமாம்; ஐயாயிரம் என்று சொன்னது ஒருவேளை தவறாக இருக்கலாம்! ஆறாயிரமாகக் கூட இருந்திருக்கலாம். கூட்டத்தின் கணக்கு இருக்கட்டும். அவர்கள் அனைவரும் ஒன்று கூடியது கூட்டுறவின் சிறப்பை அல்லவா எடுத்துக் காட்டுகிறது!

நம்முடைய மக்கள் மட்டும் ஒன்று கூடி ஓரிடத்தில் திரண்டு விட்டார்களானால், தங்களுடைய கூட்டுறவின் பலத்தைச் சரியானபடி உணர்ந்து விட்டார்களானால், அப்புறம் அவர்களால் சாதிக்க முடியாத காரியம் என்ன இருக்க முடியும்?

கூட்டுறவு இயக்கத்தின் மூலம் எத்தனையோ அற்புதங்களைச் சாதித்து விடலாம். அதலபாதாளத்தில் வீழ்ந்து கிடக்கும் கிராமங்களை உயர்த்தி மகோன்னத நிலைக்குக் கொண்டு வந்து விடலாம். ஓலை வேய்ந்த ஓட்டைக் குடிசைகளை ஓடு வேய்ந்த மாளிகைகளாக மாற்றி விடலாம். கள்ள மார்க்கெட்காரர்களை, பதுக்கல் வியாபாரிகளை ஒழித்துக் கட்டி விடலாம். எட்டாத உயரத்தில் சென்றுகொண்டிருக்கும் விலை உயர்வை எட்டிப் பிடித்து ஒரு கட்டுக்குள் அடக்கி விடலாம்! எப்பேர்ப்பட்ட பஞ்சம் வந்தாலும் சமாளித்து விடலாம்.

கூட்டுறவு இயக்கம் செய்யக் கூடிய இந்த மகத்தான அற்புதங்களெல்லாம் ருஷ்யா, ஸ்வீடன், நார்வே, டென்மார்க் முதலிய தேசங்களில் நிகழ்ந்து வருவதை நேயர்கள் ஏற்கெனவே அறிந்திருப்பார்கள்.

அந்த நாடுகளில் கூட்டுறவு இயக்கம் மகத்தான வெற்றி யடைந்திருக்கிறது. எல்லா விதமான வியாபாரங்களும், கைத்தொழில்களும் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகவே நடைபெறுகின்றன. ஆகையால் அந்த நாடுகளின் தேசிய வருமானம் ஏறக் குறைய சம அளவு மக்களுக்குப் பிரிக்கப்படுகிறது. போட்டி கிடையாது. பொறாமை கிடையாது. ஒருவரை ஒருவர் ஏமாற்றுவது கிடையாது. கூட்டுறவு இயக்கத்தின் மூலம் அந்த நாட்டு மக்கள் பெறும் ஒத்துழைப்புப் பயிற்சி மற்ற எல்லா விதங்களிலும் பயன்பட்டு அந்த நாட்டையும் அந்த நாட்டு மக்களையும் மேன்மையுறச் செய்திருக்கிறது.

இதே போன்ற அதிசயத்தைச் சந்திரசேகரபுரத்தில் நேருக்கு நேர் பார்க்க முடிந்தது. அவ்வளவு பெரிய அளவில் அல்ல; சின்ன அளவில்தான். ஆனாலும் கூட்டுறவு அற்புதம் இரண்டு இடங்களிலும் ஒரேமாதிரிதான்.

இன்று சந்திரசேகரபுரத்தில் சிறு அளவில் உதயமாகி வளர்ந்து வரும் கூட்டுறவு இயக்கமானது அபரிமிதமாக வளர்ந்து தேசம் முழுதும் பரவினால் நாட்டுக்கு நல்லது.

கூட்டுறவு இயக்கமாவது! நாட்டுக்கு நல்லதாவது! அப்படி என்ன அற்புதம் சந்திரசேகரபுரத்தில் நடந்து வருகிறது?

---

1. இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் காலஞ்சென்ற கபிஸ்தலம் ஸ்ரீ கோவிந்தசாமி மூப்பனார் அவர்களின் படத்தைத் திறந்து வைக்கிறார். விழாவுக்கு வந்திருக்கும் திரளான கூட்டத்தைக் கவனிக்கவும். 2. மேடை தளவாய் ஸ்ரீ குமாரசாமி முதலியார் கூட்டுறவு இயக்கத்தின் சிறப்பைப் பற்றிச் சொற்பொழிவாற்றுகிறார். 3. ஸ்ரீ கெ. ஆர். சீனிவாசன் பண்டகசாலையின் சேவையைப் பாராட்டுகிறார். 4. விழா ஆரம்பமாவதற்கு முன் பிரார்த்தனை நடைபெறுகிறது. 5. காரியதரிசி ஸ்ரீ சத்குரு ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களைக் கைத்தறிக் கண்காட்சிச் சாலைக்குள் அழைத்து வருகிறார். 6. ஸ்ரீ கெ. ராமசாமி முதலியார் அவர்கள் ஸ்ரீ டி. டி. கே.யை வரவேற்றுப் பேசுகிறார். 7. கூட்டுறவுப் பண்டகசாலைத் தலைவர் ஸ்ரீ கருப்பையா மூப்பனார் அவர்கள், தங்க ஜரிகை கவடிகளில் வெள்ளி எழுத்துக்களில் பொறித்த வரவேற்பு இதழை வாசித்துக் கொடுக்கிறார்.



# கூட்டுறவு இயக்கம்



பகீரதன்

இந்தியா தேசத்தில் கூட்டுறவு இயக்கத்துக்குத் தேவை அதிகம் உண்டு என்று அறிஞர்கள் பலர் வெகு காலமாகச் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். கூட்டுறவு இயக்கங்களும் ஆரம்பித்து வைக்கப்படுகின்றன. பின்னால் ஊழலும் தன்னலமும் இதில் கலந்து விடுகின்றன. இதனால் கூட்டுறவு இயக்கம் வரவர நலிந்து போய்ப் பொது மக்களிடம் ஆதரவு ஏற்படாமல் போய் விடுகிறது.

ஆனாலும் அப்படி அடியோடு நிராசை அடைந்து விடுவதற்கு எதிராகப் பல இடங்களில் கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் நடைபெற்று வருகின்றது. சென்ற பல ஆண்டுகளில் இந்தியாவில்! கூட்டுறவு இயக்கம் பலம் பெற்று வளர்ந்து வருகிறது. விவசாயிகளுக்கு உதவுவது, பண்டகசாலை அமைப்பது, வீடு கட்டுவது, பால் பண்ணை நடத்துவது முதலிய பல துறைகளில் கூட்டுறவு இயக்கம் வேகமாகப் பரவி வருகிறது.

தஞ்சை ஜில்லாவில், ஏன், தமிழ்'நாட்டிலேயே சிறந்த முறையில் அமைக்கப்பட்டு வெற்றிகரமாக நடந்து வரும் கூட்டுறவுப் பண்டகசாலை சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலைதான் என்பதை நேயர்களுக்குச் சொல்லி வைக்கிறேன்.

பாபநாசம், கும்பகோணம், வலங்கிமான், சுந்தரப் பெருமாள் கோயில், சந்திர சேகரபுரம் ஆகிய ஊர்களிலும், அந்த ஊர்களைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் வாழ்ந்து வரும் சுமார் பத்தாயிரம் குடும்பங்களுக்கு உள்ள தேவைகளைச் சந்திர சேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலை பூர்த்தி செய்து வைக்கிறது. ஆயிரம்பேருக்கு மேல் இந்தக் கூட்டுறவுப்





குளித்தலை S. M. E. S. கார்ப்பரேஷன் ரெஸிடென்ட் இன்ஜினியர் ஸ்ரீ பி. எஸ். நடேச அய்யர் அவர்கள் புதல்வி சௌ. இந்திராவுக்கும் ஐபல்பூர் டிரெயினிங் சென்டர் ஸ்ரீ எஸ். விவேகானந்தா அவர்களுக்கும் குளித்தலையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

பண்டக சாலையில் அங்கத்தினர்களாகச் சேர்ந்திருக்கிறார்கள். ஒரு பங்கின் விலை ஐந்து ரூபாய். ஒரு பங்கு எடுத்துக் கொண்டவர்களுக்கும் ஐந்நூறு பங்கு எடுத்துக் கொண்டவர்களுக்கும் ஒரே வோட்டுத்தான். ஒரேமாதிரியான மதிப்புத்தான்; ஒரேமாதிரியான உரிமைதான்.

அப்படிச் சேர்ந்தவர்களில் பல நூறு ஏக்கரா நிலம் படைத்த நிலப் பிரபுக்கள், ஏழைக் குடியானவர்கள் முதற் கொண்டு ஹரிஜன மக்கள் வரையில் இருக்கிறார்கள்.

படித்தவர்கள், படிக்காத பாமரர்கள் என்ற வித்தியாசம் இன்றி அனைவரும் சேர்ந்திருக்கிறார்கள். பார்க்கப்போனால் அங்குள்ள மக்களுக்குள் வித்தியாசம் அதிகம் இல்லை தான். நிலம் படைத்த பிரபுக்களும், ஏழைக் குடியானவர்களும் மக்களுக்கு உணவு அளிக்கும் புனிதமான உழவுத் தொழிலைத் தானே செய்து வருகிறார்கள்?

இவ்வளவு நல்ல முறையில் அமைந்திருக்கும் சந்திரசேகரபுரம் கூட்டுறவுச் சங்கத்தின் பத்தாவது வருஷ விழாவில் கலந்துகொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

கூட்டுறவு இயக்க விழாவின் வர்ணனையைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் இந்தக் கூட்டுறவுச் சங்கத்தின் வரலாற்றை அறிந்து கொள்வது அவசியமாகும்.

** ** **

இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலை எப்பொழுது உண்டாயிற்று? ஏன், உண்டாயிற்று?

சென்ற மகா யுத்தம் உலகத்துக்கு என்ன கஷ்டத்தையும் நஷ்டத்தையும் விளைவித்திருந்தாலும் பாரதத்தைப் பொறுத்த வரையில் மிகப் பெரிய அற்புதங்களைச் சாதித்துக் கொடுத்திருக்கிறது. நமக்குச் சுதந்திரத்தை வாங்கிக் கொடுத்திருக்கிறது. உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்தில் உணவுப் பொருள்களின் விலைகள் விஷம் போல் ஏறின. உணவுப் பண்டங்கள் கிடைப்பது அபூர்வமாகி விட்டது. ஒன்றுக்குப் பத்து மடங்கு அதிக விலை கொடுத்து உபயோகமில்லாத சாமான்களைக்கூட மக்கள் வாங்கி உபயோகிக்க ஆரம்பித்தனர். அந்தக் காலத்தில் சந்திரசேகரபுரத்திலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் வாழும் மக்கள் மிகச் சிரமப்பட்டுப் போனார்கள். கிராமத்தின் வாழ்க்கை முறையே சிதைந்து விட்டது. ஏழை மக்களின் தினசரி வாழ்க்கை சோகக் கதையாக, கண்ணீரின் சரித்திரமாக, இதயங்களின் ஓலமாக மாறி வந்தது.

இதை உபயோகப்படுத்திக்கொண்டு குழப்பவாதிகள் கிராமங்களில் மிராசுதார் குடியானவர் தகராறை ஏற்படுத்தினார்கள். அதனால் குழப்பவாதிகளின் கை ஓங்க ஆரம்பித்தது. இந்தக் கோர காட்சிகளைக் கண்டு நல்ல மனம் படைத்தவர்கள் பலர் துடித்தனர். இதற்கு ஏதாவது வழி செய்ய வேண்டும் என்று ஆலோசித்தனர். அப்படி ஆலோசனை செய்தவர்களில் ஒருவர்தான் 'சந்துரு' என்று அந்தக் கிராமத்து மக்களால் அன்புடன் அழைக்கப்படும் ஸ்ரீ சி. எஸ். ராமசந்திரன். ஸ்ரீ சந்துரு உணவுப் பண்டங்களின் விலை உயர்வுக் கொடுமையிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதற்குத் திட்டம் இட்டார். 1945-ம் ஆண்டு சுமார் நூறு அங்கத்தினர்களுடன் சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டக சாலை என்ற பெயரில் ஒரு பண்டகசாலையை ஆரம்பித்து மக்களுக்கு நியாய விலையில் உணவுப் பண்டங்களை விற்று வந்தார். இங்குள்ள கிராம மக்கள் இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலையை ஒரு வரப்பிரசாதமாக எண்ணி மகிழ்ந்தார்கள்.

1945-ம் ஆண்டிலிருந்து கூட்டுறவுச் சங்கம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக எத்தனையோ தொல்லைகளுக்கு மத்தியில் வளர்ந்தது. இன்று சுமார் ஆயிரத்து முப்பது அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். சென்ற ஆண்டில் மட்டும் பண்டக சாலையில் ஆறு லட்சம் ரூபாய்க்கு மேல் சாமான்கள் விற்பனை ஆயின. 9,842 ரூபாய் லாபம் கிடைத்தது. கையிருப்பு சேம நிதியில் ரூ. 32,811 ரூபாய் வரையில் சேர்ந்திருக்கிறது. பங்குப் பணத்தைத் தவிர வியாபாரத்துக்கு அதிக மூலதனம் தேவையாக இருந்தால் சர்க்காரிடம் கடனுக்குப் போவதில்லை. அங்கத்தினர்களே கடன் கொடுத்து உதவுகிறார்கள். சுமார் ஐம்பதாயிரம் ரூபாய் நிரந்தர டெபாஸிட்டில் கொடுத்திருக்கிறார்கள். பண்டக சாலை இப்பொழுது இருந்து வரும் கட்டடத்தை ரூபாய் முப்பத்தைந்து ஆயிரத்துக்குச் சொந்தமாக வாங்கிவிடத் தீர்மானித்து ஆண்டு தோறும் 3000 ரூபாய் வீதம் சென்ற ஐந்தாண்டுகளாகக் கொடுத்து வருகிறார்கள் என்று கேள்விப்பட்டேன்.

இந்தப் பண்டக சாலையின் சேவையால் எல்லாப் பொருள்களும் நியாயமான விலைக்குக் கிராமத்திலேயே கிடைக்கின்றன. சென்னை நகரில் என்ன விலைக்குக் கிடைக்குமோ அதே விலைக்குக் கிராமத்தில் கிடைக்கிறது. சில பொருள்கள் இன்னும் சற்று விலை குறைவாகவும் கிடைக்கின்றன. மளிகை சாமான்கள்,

எண்ணெய் முதலியவைகள் சுத்தமாகக் கலப்பில்லாமலும் கிராம மக்களுக்குக் கிடைத்து வருவதைக் குறிப்பிட வேண்டும்.

மிராசுதார், குடியானவர், ஹரிஜன மக்கள் எல்லாரும் பரஸ்பரம் துவேஷமின்றி வாழ்ந்து வருகின்றனர். இப்படிப்பட்ட ஒரு அதிசயமான ஒற்றுமையைச் சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலை சாதித்து வருகிறது!

இப்பொழுது தெரிகிறதல்லவா சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலையின் சரித்திரம். இதன் பத்தாவது ஆண்டு விழாவைப் பண்டகசாலையின் நிர்வாகிகள் சிறப்பாகக் கொண்டாடியதிலும் வியப்பொன்றுமில்லை. இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் ஆண்டு விழாவைத் துவக்கி வைத்தார். விழாவில் சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலையின் வளர்ச்சிக்குப் பெருதவி புரிந்து வரும் அதன் முன்னாள் தலைவரும் தஞ்சை ஜில்லாவின் பிரபல மிராசுதாரருமான காவலூர்சென்ற கபிஸ்தலம் ஸ்ரீ கோவிந்தசாமி மூப்பனாரின் திரு உருவப் படத்தைத் திறந்து வைத்தார். விழாவுக்கு ஸ்ரீ ஜி. கருப்பையா மூப்பனார் தலைமை வகித்தார்.

சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலையின் பத்தாவது ஆண்டு விழாவைச் சிறப்பாக நடத்துவதற்கு அதன் காரியதரிசி ஸ்ரீ சி.எஸ். ராமச்சந்திரன் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருந்ததைப் பாராட்ட வேண்டும்.

இம்மாதிரி விழாவை வேறு எந்த ஸ்தாபனமாவது நடத்தி யிருந்தால் அந்தக் கிராமத்தில் முந்நூறு பேர்களாவது கூடி யிருப்பார்களா என்பது சந்தேகம்தான்.

விழாவில் சுமார் மூவாயிரம் பேர் உட்காருவதற்கு ஏற்ற அழகான பந்தல்.

பிரதிநிதிகள் தங்குவதற்கு மாடியில் தனிப் பந்தல். தலைவர்களுக்கென்று தனி இடம்.

சமையலுக்குக் கொட்டகை. பந்திக்கு ஐந்நூறு பேர் வீதம் சாப்பிடுவதற்குப் பந்தல்.

கண்காட்சிக் கொட்டகை.

இவ்வளவுக்கும் மின்சார தீபங்கள்.

இவற்றை யெல்லாம் யோசித்தால் மகாநாட்டுச் செலவுக்குப் பல ஆயிரம் ரூபாய்கள் ஆகி யிருக்கும் என்று வியக்கத் தோன்றும்.

ஆனால் கூட்டுறவு முறையில் கூட்டுறவுச் சங்கத்தின் அபாரமான சக்தியினால் நடப்பதால் செலவு ஒன்றும் பிரமாதமாக ஆகவில்லை என்று அறிந்தேன்.

** ** **

விழா வர்ணனை இருக்கட்டும். விழாவில் நடந்த விஷயங்களைக் கவனிப்போம்.

கூட்டுறவுப் பண்டகசாலை ஆண்டு விழாவில், கூட்டுறவு இயக்கத்தைப் பற்றியும், கூட்டுறவு முறையின் அவசியத்தைப் பற்றியும் பேசினார்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை யல்லவா?

இருந்தாலும் சென்னை முதலிய நகரங்களில் படித்துப் பட்டம் பெற்ற ஜனங்கள் கூட்டுறவுப் பிரச்னைகளைப் பற்றிப் பேசினால் எவ்வாறு புரிந்து கொள்வார்களோ அதைப் போலவே



சந்திரசேகரபுரம் கிராமத்து மக்களும் வெகு நுட்பமாக இயந்திரிபுக்கு இடமின்றித் தெரிந்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ டி.டி.கே. உணவுப் பண்டங்களின் விலை உயர்வு விஷயமாகவும், கைத் தறியின் அவசியத்தைப் பற்றியும் பேசும் போது சபையில் உள்ள ஒருவர் அவர் கூறிய விஷயத்தை ஆதரிக்காமல் விவாதிக்கவே ஆரம்பித்து விட்டார். தஞ்சை ஜில்லா மக்களின் விஷய ஞானம் எப்பொழுதுமே அதிசயிக்கத் தக்கதுதான். ஆனாலும் அவர்களை இவ்வளவு தூரம் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் ஒன்றுபடுத்தி உணவுப் பண்ட விலைகள், கைத்தறிகளின் அவசியம் முதலியவைகளைப் பற்றி நன்றாகப் புரிந்து கொள்ளும்படி செய்திருக்கும் கூட்டுறவு இயக்கத்தையும், அதை நடத்தும் நிர்வாகிகளின் ஊக்கத்தையும் முயற்சியையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

கூட்டுறவுப் பண்டகசாலையின் பத்தாண்டு விழாவை ஒட்டிக் கைத்தறித் துணிகள் காட்சி ஒன்றையும் வைத்திருந்தார்கள். கண்காட்சியில் விதம் விதமான கைத்தறித் துணிகள் வைக்கப்பட்டிருந்தன. பல வேலைப்பாடுகள் நிறைந்த கம்பளங்கள் இருந்தன. எல்லாம் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் தயாரிக்கப்பட்ட கைத்தறித் துணிகள் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

இந்தக் கூட்டுறவுப் பண்டகசாலையையும் அது நடந்துவரும் முறையையும் யாராவது ஒரு தடவை நன்றாகப் பார்த்து விஷயத்தையும் தெரிந்து கொண்டுவிட்டால், அவருடைய உள்ளம் விரிந்து அவருடைய வாழ்வே கூட்டுறவு இயக்கத்தில் ஐக்கியமாகிவிடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இடையாக ஒரு விஷயம். சாதாரணமாய்க் கூட்டுறவு இயக்கத்தை நடத்துகிறவர்களுக்கு இல்லாத அதிசயத் திறமை சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலை நிர்வாகிகளிடம் இருக்கிறது. கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக இந்தத் தேசத்தில் அமைதியான வாழ்க்கையை நிலைநாட்ட முடியும் என்று நம்பும் பல பிரமுகர்கள் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். இந்தக் கூட்டுறவுச் சங்க அங்கத்தினர்கள் எல்லாரிடமும் பரிபூரண நம்பிக்கையையும் பெற்றிருக்கிறார்கள்.

கூட்டுறவுப் பண்டகசாலைத் தலைவர் ஸ்ரீ ஜி. கருப்பையா மூப்பனார், காரியதரிசி ஸ்ரீ சி. எஸ். ராமச்சந்திரன், பொக்கிஷதார் ஸ்ரீ ஏ. சாமிநாத ஐயர், டைரக்டர்கள் ஸ்ரீ டி. என். சுப்பிரமணிய ஐயர், ஜனாப் கே. வி. அப்துல்ஹமீத் சாகிப், ஸ்ரீ பி. என். ரத்தினம் ஐயர், ஸ்ரீ ஆர். மாதவராவ் ஆகியவர்கள் பெயரைக் கேட்டாலே கூட்டுறவு இயக்கத்தின் அங்கத்தினர்கள் மட்டுமல்லாது அந்தப் பக்கத்தில் உள்ள பல கிராமத்து மக்களும் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

இத்தனை ஒற்றுமையுடனும் பரஸ்பர நம்பிக்கையுடனும் திறமையாக நடைபெற்று வரும் சந்திரசேகரபுரம் கூட்டுறவுப் பண்டகசாலையைப் பார்த்து விட்டுத் திரும்பும்போது, கூட்டுறவு இயக்கம் நாட்டுக்கு நல்லது என்ற நம்பிக்கையே மேலோங்கி யிருந்தது.

# யோக சிகிச்சை

# டி.பி. அல்லது க்ஷயம்

சுந்தரம்

## 3. வேண்டாம் பி. ஸி. ஜி

நல்ல உணவு, நல்வாழ்வு, வருமானம், ஓய்வு, ஆட்டம், காற்ளேட்டம், பொழுது போக்கு, களிப்பு இவை யாவும், நோய்களை வராமல் தடுக்கும் என்பதை மேல்நாட்டு நிபுணர்கள் உள்பட எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். எனவே, மேல் நாடுகளில் டி. பி. தாக்குதலால் ஏற்படும் மரண விகிதம் குறைந்திருப்பதற்குக் காரணம் வாழ்க்கை வளமைதான்.

வம்ச பரம்பரையாக டி. பி. யின் எதிர்ப்புச் சக்தி உடலில் வளர்ந்து சந்ததிகளுக்குப் பரம்பரைச் சொத்தாக ஏற்பட்டுள்ளது என்பது ஒப்புக் கொள்ளத் தக்கதல்ல. இதில் கடுகளவு உண்மை இருந்தால், கடலளவு சந்தேகம் உள்ளது!

டி. பி. கிருமிகளை உடலினுள் புகுத்தி விட்டால் டி. பி. வராமல் தடுத்து விடலாம் என்று கோட்டை கட்டுவது, வீண் விபரீத ஆகாயக் கோட்டையாகும். இந்தக் கோட்டைக்கு ஆதாரமுமில்லை; அஸ்திவாரமும் கிடையாது.

அம்மை வந்தவர்களை, மறுபடியும் அம்மை தாக்குவதில்லை என்ற காரணத்தை உதாரணமாகக் கொள்ளுகிறார்கள். அம்மை முன் கண்ட பலருக்கு அம்மை இருப்பவருடன் கூடி வாழ்ந்தாலும், மறுபடியும் அம்மை ஏற்படுவதில்லை. இவ்வாறு அம்மை வராததால் என்ன தீர்மானத்துக்கு வரமுடியும்? இவர் உடலில் அம்மை மறுப்புச் சக்தி வளர்ந்திருக்கிறதென்று நிச்சயிப்பது? இவர்களின் தற்கால உணவு, ஒழுக்கம், ஆரோக்கியம் நன்ருக இருப்பதால்தான் என்று ஏன் கொள்ளக்கூடாது! அம்மை ஒருதரம் ஏற்பட்டவருக்கு மறுபடியும் அம்மை ஏற்படுவதையும் அதனுல் இறந்து போவதையும் கூடக் கண்டுள்ளோம்! இதற்கு விடை என்ன? முதல் அம்மை போட்டியதால் உண்டாகிய மறுப்புச் சக்தி என்னவாயிற்று?

இந்தக் கருத்தைக்கொண்டு அம்மைப் பால் குத்துகின்றனர். இந்தக் குத்துதலால் நன்மை ஏற்பட்டுள்ளதென்று முடிவு செய்து, டி. பி. பூச்சியையும் உள்ளே செலுத்துகிறார்கள். டி. பி. யைத் தடுக்கிறதென்று, பி. ஸி. ஜி என்ற ஊசியைக் குத்தி வருகிறார்கள்.

அம்மைப் பால் குத்துவதையே நான் சமயம்நேரும்போழுதெல்லாம் எதிர்த்து வந்திருக்கிறேன்! நோயைத் தடுக்க, நல்வாழ்வும், நல்லுணவும், ஆரோக்கிய இடமும் தான் காரணம்; ஊசி குத்துதல் அல்ல என்று வாதித்திருக்கிறேன். அம்மைப் பால் குத்துவது ஒருவித அபாயம் என்ருல், பி. ஸி. ஜி என்ற டி. பி. ஊசியைக் குத்திக் கொள்ளுவது அதைவிடப் பலவிதத்திலும் அபாயம் என்றுதான் கூறுகிறேன்.

டி. பி. தாக்குதலைப் பற்றி நிபுணர்களின் அபிப்பிராயம் என்ன? இது தொத்து வியாதி; இது ஆகாயத்தில் இல்லை என்று யாராலும் கூற முடியாது. ஆகாயம் ஏன்? ஆரோக்கியமாக வாழும் எவர் உடலிலாவது இது இல்லை என்று சத்தியம் செய்ய இயலாது. ஆனுல் எப்பொழுது இது தன்னை விளக்கிக்கொள்ளுகிறது; வளர்த்துக் கொள்ளுகிறது?

மனிதனின் பொது ஆரோக்கியம், நோய்த் தடுப்பு உடல் அம்சங்கள் எப்பொழுது பலஹீனப் படுகின்றனவோ அப்பொழுது இது நுழைந்து ஊன்றிக் கொள்ளுகிறது; முன்பே நுழைந்திருந்தால் அதிவேகமாக வளர்ந்து, வெளிப்படுகிறது! இல்லா விட்டால் டி. பி. பூச்சிகள் இருந்தாலும், வெளியாகா. எத்தகைய குறும்புகளும் அவை செய்ய மாட்டாது.

எனவே, டி. பி. க்குத் தடுப்பு முறை, நல்லுணவு, நல்ல காற்று முதலிய அம்சங்களா? அல்லது டி. பி. அரக்கனை உள்ளே நுழைப்பதா? என்ற கேள்வி எழுகிறது.

பி. ஸி. ஜி யால் டி. பி. க் கள்ளனை நுழைப்பது பரவாயில்லை என்கிறார்கள்! ஏனெனில், இந்த டி. பி. பல முறைகளால், மிகவும் வீரியம் குறைக்கப்பட்டுள்ளதாம். மிக்க வீரியம் குறைந்திருக்கும் இது, போதும்ான மறுப்புச் சக்தியை உண்டாக்கும் என்பது என்ன நிச்சயம்? வீரியம் அதிகமாகவே இருந்தால், பலஹீன சரீர அமைப்புகள் (கோழை—என்ற உடல்) இதைத்தடுத்து நன்மை அடையும் என்பது எதிர்பார்க்கக் கூடியதா?

குத்தப்பட்டவர்களெல்லாம் சாகவில்லையே எனலாம். பல சிறுவர்கள் இறந்தும் இருக்கிறார்கள். பி.ஸி.ஜி வேறு அம்

சங்கனைத் தாக்கி, எதிர்காலத்தில் வேறு கோளாறுகளை உண்டாக்குவதில்லை என்பதற்கு என்ன அத்தாட்சி? ஒரு தரம் பி. ஸி. ஜி குத்திவிட்டால் ஆயுள் முழுதும் டி. பி. வராது என்ற திட்டமும் இல்லையே! உடனே பி. ஸி. ஜி குத்தப்பட்டவருக்கு டி. பி. வராவிட்டாலும், காலம் கழித்து இது ஆளை இரையாக்காது என்று யார் வரம்பிடுவது? குத்திய ஒவ்வொரு குழந்தையின் எதிர்கால ஆரோக்கியத்தைப்பற்றியும்தொடர்ந்து கணக்கு யார் வைக்கிறார்கள்?

குத்தின நூறு மக்களில் எண்பது பேருக்கு டி. பி. தாக்குவதில்லை; குத்திய மருந்து இருபது பேருக்கு டி. பி.யையும் மரணத்தையும் உண்டாக்கினால் என்ன என்ற எண்ணம் இந்த இயக்கத்தார்களுக்கு உள்ளதா? இச் சந்தேக முறையால் ஏன் இருபது பேராவது சாக வேண்டும்? ஒவ்வொரு சிறுவனும் அவரவர் பெற்றோருக்கு உயிர் அல்லவா?

'' பி. ஸி. ஜி ஏற்றப்பட்ட சிறுவர்களுக்கு டி. பி. தாக்கவில்லை பாருங்கள்! என்ன நன்மை!'' என்று ஆரவாரிப்பவர்களுக்கு ஒரு கேள்வி! இவர்களுக்கு டி. பி. தாக்காதது இவர்களின் திடகாத்திரத்தால் இல்லையென்று விஞ்ஞானத் தீர்மானம் கூறுவீரா? இந்தச் சிறுவர்களின் உணவு, நல்ல காற்று, நல்ல வாசஸ்தலம் இவற்றால் டி. பி. தாக்கவில்லை என்று நாம் ஏன் கருதக்கூடாது?

பி. ஸி. ஜியை மிகத் தீவிரம் குறைத்து ஏற்றினால், இவர்கள் கொள்கைப்படி, மறுப்புச்சக்தி உண்டாகாமல் போகலாம்! 'வீரியம் அதிகமாக இருந்தால், வேண்டாத நோயை விலைக்கு வாங்கி வளர்த்து விடலாம்.' இதனால் ஆபத்து ஏற்பட்டுள்ளது! பயன் ஏற்பட்டுள்ளது என்பதற்கு அத்தாட்சி இல்லை!

இதற்குச் செலவிடப்படும் பணத்தை, சிறுவர்களின் பாலுக்கும், ஆரோக்கிய வசதிகளுக்கும் செலவிட்டால் பி.ஸி.ஜி யின் நன்மை, இந்த வர்க்கத்துக்கு ஏற்படாதா? அதிக பலனே கிடைக்கும் என்று விஞ்ஞானம், பகுத்தறிவு, அனுபவம் இவையாவும் முறையிடுகின்றன.

வைத்திய நிபுணர்கள் டி.எம்.டன்லப், பி. எம். டிக் இருவரும் டி. பி. வராமல் தடுக்க எது நல்ல முறை என்று அபிப்பிராயம் தந்துள்ளார்கள்? இவ்விருவருடைய பட்டங்களும் பல எழுத்துக்கள் கொண்டுள்ளன. ஒருவர் தெராப்யூடிக்ஸ் ப்ரொபஸர்—ப்ரொபஸர் ஆப் க்ளினிகல் மெடிஸின். மற்றவர், மார்பு நோய்களில் ஸ்பெஷல் ஸர்ஜன். இவர்கள் டி. பி. விஷயமாக—பி. ஸி. ஜியைப் பற்றி அதிக ஆராய்ச்சி நடத்த அவசியம் இருந்தாலும், குழந்தைகளுக்கு, டி. பி. உண்டாவதைத் தடுக்க, டி. பி. நோயாளிகளை ஒதுக்கி வைப்பதும், அதிக பால் வசதிகளை அளிப்பதுமே உத்தம சாதனங்கள் என அபிப்பிராயம் கூறுகிறார்கள்.

டி. பி. யைத் தடுக்க, 'வேண்டாம், பி. ஸி. ஜி.' என்று ஒதுக்குகிறோம். வேறு என்ன வேண்டும்? 'டயட்'—அதாவது தகுந்த உணவு வசதி; நல்ல காற்றோட்ட வசதி; 'யோகா'—அதாவது யோக சிகிச்சை வசதிதான் வேண்டும். ஆங்கில எழுத்தில் டி. ஏ. ஒய் (D. A. Y.) என்ற முறை தான் உசிதம் உத்தமம், தேவை.

டி. பி. சிகிச்சையில், டி. பி. வராது தடுக்கும் முறை மிக உயர்ந்த ஸ்தானம் பெறுகிறது. இதை ஆராய்வதே சிகிச்சைக்கு வழியையும் விளக்கியதாகும். வந்தபின் சிகிச்சை தேடுவதைக் காட்டிலும், வராது தடுத்துக் கொள்வது மேன்மை யல்லவா? சமூகத்தையே கொடிய நோயிலிருந்து காக்கும் தடுப்பு முறைகளை ஆராய்வோம். இந்த ஆராய்ச்சி, டி. பி. தொத்தும் முறையையும் சார்ந்ததாகும்.



## ஜனாதிபதி ராஜன்பாபு மதுரை விஜயம்

ஜனாதிபதிக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் ஒரு விசேஷ வரவேற்பு அளித்தார்கள். ஜனாதிபதியுடன் தமிழ்ச் சங்கத் தலைவர் பி. டி. ராஜன், கவர்னர் ஸ்ரீ பிரகாசா, முதல் மந்திரி காமராஜ், ஸ்ரீ பக்தவத்ஸலம் முதலியவர்களையும் இன்னும் பல பிரமுகர்களையும் காணலாம்.

ஜனாதிபதி ஸ்டேஷனை விட்டு இறங்கியதும் ஊர்வலமாகப் பவனி வரும் காட்சி.

மதுரை ஜில்லா போர்டு தலைவரும் அங்கத்தினர்களும் விருந்துபசாரம் நடத்தியபோது எடுத்த படம்.

ஜனாதிபதிக்கு மதுரை நகர சபையினர் அளித்த வரவேற்பில் கலந்து கொண்ட பிரமுகர்களைக் கீழே உள்ள படத்தில் காணலாம்.











## இந்த வித்தியாசத்தைக் கவனியுங்கள் :

# வெண்மையான ஆடைகளை அதிவெண்மையாக்குகிறது

சாதாரண சோப்பினால் சுத்தம் செய்த பின் உங்களுடைய வெண்மையான ஆடைகளுக்கு டினோபால் உபயோகிப்பதால், நீங்கள் எவ்வித தோற்றமளிக்கின்றீர்கள் எனப் பாருங்கள், வெண்மையான ஆடைகளைப் பிரகாசமாகவும். பளபளப்பான வெண்மையுடனும் வைக்கச் செய்யும் பிரத்தியேகமான தொருகுணம் டினோபாலிலடங்கியுள்ளது.






# டினோபால்

"டினோபால்" என்பது ஜே. ஆர். கேய்கி, எஸ். ஏ. பாஸ்ல், ஸ்விட்ஸர்லாந்த், அவர்களுடைய ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்.

அமால்கமேடட் கெமிக்கல்ஸ் அன்ட் டைஸ்டப்ஸ் கோ. பிரைவேட் லிட்.,
பி. ஓ. பாக்ஸ் 965, பம்பாய்.



# பாசம்

'சரஸன்'

பத்மாவின் முகத்தைக் கண்ணுற்ற பாலம்மாளுக்குக் கவலையாய்ப் போய் விட்டது. "ஐயோ! இந்தத் தடவையும் முன்போல எங்கே கோபப்பட்டுக் கொண்டு, இவள் திடுதிப்பென்று ஊருக்குப் புறப்பட்டு விடுவாளோ!" என்று பயந்தாள்.

அவள் அம்மாதிரி பயப்படக் காரணம் இருந்தது. இதற்கு முன்பு பல தடவைகள் பத்மா தன் தமையன் நம்பீசனுடைய வீட்டுக்கு வந்திருக்கிறாள் தன் குழந்தைகளுடன். ஒவ்வொரு தடவை வந்திருந்தபோதும், ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு, மனோ வியாகுலத்துடனே திரும்பி விடுவது வழக்கம். தமையன் வீட்டில் நுழையும் போதிருக்கும் உற்சாகமும், உளக்களிப்பும் திரும்பும்போது மறைந்து, அதற்குப் பதிலாகக் கோபமும் நிந்தனையும்தான் காணப்படும்.

பத்மாவின் கணவன் ராமபத்திரனுக்கு மைசூரில் வேலை. பிரதி வருஷமும் கோடை விடுமுறையின்போது, தம் மனைவியையும் மக்களையும் சென்னையில் உள்ள தம் மைத்துனர் நம்பீசனிடம் அனுப்பி விடுவது வழக்கம். நம்பீசனும் கோடை விடுமுறைக்கு ஒரு மாதம் முன்னமேயே, ராமபத்திரனுக்கு, பத்மாவையும் குழந்தைகளையும் கட்டாயமாகச் சென்னைக்கு அனுப்பி விடும்படி, தவறாமல் எழுதி விடுவார். பத்மாவுக்கும் பரம சந்தோஷம்தான். தன் தமையன் அழைக்கிறான் என்பதால் மட்டுமல்ல; தன் தாயையும் கண்டு சீராடலாம் என்ற ஆசையும் காரணம்.

ராமபத்திரனும் பலமுறை பார்த்திருக்கிறார், தம் மனைவி புறப்படும்போது காணப்படும் உற்சாகத் தோற்றத்தையும், திரும்பும்போது காணப்படும் மாறுபட்ட தோற்றத்தையும்.

"ஏன் பத்மா? பிறந்தகம் உனக்குப் புளித்து விட்டதா?" என்று கேலி கூடச் செய்தது உண்டு அவர்.

"போதுமே! என் பிறந்தகத்து லட்சணம்! இனி ஜன்ம ஜன்மத்துக்கு அந்த வீட்டுக்குப் போனால் கேளுங்கள்" என்பாள் பத்மா.

இம்மாதிரி பத்மாவின் உரைகளைப் பல தடவைகள் கேட்டுப் பழகி அலுத்துப் போயிருக்கிறார் ராமபத்திரன்.

இந்தத் தடவையும் வழக்கம் போலவே பத்மா தன் குழந்தைகளுடன் தமையன் வீடு வந்து சேர்ந்தாள். வந்த ஒரு வாரம் நிலைமை சௌஜன்யமாகவேதான் இருந்தது.

அன்று ஞாயிற்றுக் கிழமை. நம்பீசன் ஏதோ முக்கியமான காரியாலய வேலை செய்து கொண்டிருந்தார் தம் அறையில். அறைக்கு வெளியே குழந்தைகளின் கும்மாளம் காது செவிடுபடும்படி இருந்தது. அவரால் தம் வேலையைக் கவனிக்க முடியவில்லை.

கோபத்துடன் தம் மனைவியைக் கூப்பிட்டார். "இதோபார், நான் எங்கேயாவது ஓடி விடட்டுமா? இம்மாதிரி சந்தைக் கடை இரைச்சலில் எப்படி வேலை செய்கிறது? அந்தச் சனியன்களை அடித்து வெளியே விரட்டு!" என்றார். பார்வதி திருதிரு வென்று விழித்தாள். பார்வதி விழித்ததற்குக் காரணம் என்னவெனில், கூச்சலிட்ட குழந்தைகள் எல்லாம் பத்மாவினுடையவை. அவள் குழந்தைகள் எல்லாம் வெளியே வேறு யார் வீட்டுக்கோ விளையாடச் சென்று விட்டார்கள். ஆனால் அவள் கணவனுக்கு இது தெரியாது. தம் குழந்தைகள்தான் விஷமம் செய்வதாக எண்ணி அம்மாதிரி இரைந்தார். போதாக் குறைக்கு, அவர் அம்மாதிரி இரைந்ததைப் பத்மாவும் கேட்டுக் கொண்டு நின்றாள். வேறு வினை என்ன வேண்டும்? சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாத நிலையில் தவித்தாள் பார்வதி.

சிறிது நேரத்தில் நம்பீசன் வெளியே கிளம்பி விட்டார். பத்மாவின் முகம் கோவைப் பழமாய்ச் சிவந்துவிட்டது. அதைப் பார்த்த பார்வதி, "பத்மா! நீ வித்தியாசமாய் எண்ணாதே. அண்ணா கோபித்தது உன் குழந்தைகளையல்ல. தம் குழந்தைகளைத்தான் என்று அவர் எண்ணிக் கொண்டு விட்டார்" என்றாள் நயமாக.

தாய் பாலம்மாளும் தன் பெண்ணின் சொரூபத்தைக் கண்டு பயந்து விட்டாள்.

"அம்மா! போதும் மரியாதை. அண்ணா என் குழந்தைகளை அடித்துத் துரத்துகிற மட்டும் நான் இங்கில்லை. இதோ இப்போதே அழைத்துக் கொண்டு புறப்படுகிறேன். யாருக்கும் தன் குழந்தைகள் என்று சொன்னால் ஒருமாதிரிதான். பிறர் குழந்தைகள் என்றால் ஒரு மாதிரிதான். நான் பல தடவைகள் இந்த வீட்டில் அவமானமும் அவமதிப்பும் அடைந்தும், புத்தி யில்லாமல் மானம் கெட்டு வந்தேனே! என் புத்தியை.." என்றாள் பத்மா படபடவென்று.

'பத்மா! ஏன் இம்மாதிரி அசடுபோல் பேசுகிறாய்? நீயாக ஏதாவது கற்பனை செய்து கொண்டு ஏன் இப்படிப் பதறுகிறாய்?' என்று கேட்க வேண்டிய அவள் தாயார் ஏன் மௌனம் சாதித்தாள் என்பதுதான் பார்வதிக்குப் புலனாகவில்லை.

வெளியே சென்ற நம்பீசன் வீட்டுக்குத் திரும்பியதும் விஷயமறிந்து கொண்டு தமக்குள் நகைத்துக் கொண்டார்.

"அம்மா! நீயாவது சமாதானப்படுத்தி அவளை நிறுத்தி வைக்கக் கூடாதா? பத்மா

## வடமொழிச் செல்வரின் மறைவு



மகா மகோபாத்யாய சாஸ்திர ரத்னுகர பண்டித ஏ. சின்னசாமி சாஸ்திரிகள் வட நாட்டைத் தமது வடமொழிப் புலமை மூலம் வெற்றி கொண்டவர்.

காசி ஹிந்து சர்வகலாசாலையில் பணியாற்றச் சென்ற சாஸ்திரிகள் முப்பத்தேழு ஆண்டுகள் அங்கு அரும்பணி புரிந்தார். பிறகு திருப்பதி ஸ்ரீவெங்கடேசுவர ஓரியண்டல் கல்லூரியிலும் கல்கத்தா சர்வகலாசாலையிலும் சிறிது காலம் சிறப்பாகப் பணியாற்றி வந்தார்.

வட மொழியிலுள்ள மீமாம்சை, தர்ம சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் இவற்றில் புலமை வாய்ந்தவர். 'கற்றோர்க்குச் 'சென்ற விடமெல்லாம் சிறப்பு' என்ற மணிமொழிக்கு இலக்கியமாக விளங்கிய இப்படிப்பட்ட மகா வித்வான் சமீபத்தில் தமது அறுபத்தேழாவது வயதில் காசியில் காலமான செய்திகேட்டுப் பெரும் துயர் உற்றோம். அவருடைய குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



வின் குழந்தைகள் என்று தெரிந்தா நான் கடிந்து கொண்டேன்? குழந்தைகளைக் கொஞ்சுவதிலும், கடிவதிலும் எனக்கு எல்லாம் ஒன்றுதானே 'அம்மா! ஒவ்வொரு சமயமும் பத்மா இம்மாதிரி அற்ப விஷயத்துக்கெல்லாம் மனத் தாங்கல் பட்டுக் கொண்டா போக வேண்டும்?'' என்றார் அவர் மிகவும் கலங்கிய மனத்துடன்.

மேற்கண்ட சம்பவத்துக்குப் பின் நாலைந்து கடிதங்கள் எழுதினார் நம்பீசன். தம் தங்கைக்கு அவள் மனம் சமாதானத்தை அடையும் பொருட்டு ஒவ்வொரு கடிதத்தையும் அவர் தாய்க்குப் படித்துக்காட்டியே தபாலில் சேர்த்தார். ஆனால் பத்மாவிடமிருந்து பதில் மட்டும் வரவில்லை. அந்தக் கடிதங்களுக்குப் பதில் வராமல் இருந்ததிலிருந்தே பத்மாவின் கோபம் தீரவில்லை என்பது தெரிந்தது.

ஒரு வருஷம் ஓடிவிட்டது. மீண்டும் கோடை வந்தது. பாலம்மாள் தன் மைந்தனை ஏதோ கேட்க விரும்பினாள். ஆனால் விஷயம் வெளி விட்டால்தானே! தம் கடிதங்களுக்குப் பதிலே போடாத காரணத்தினால், பத்மாவின் மீது நம்பீசனுக்குக் கோபமும் தாபமும் நிறைய இருந்தன என்பதை மட்டும் தாயார் உணர்ந்து கொண்டாள். இந்நிலையில் அவனை எவ்வாறு கேட்பது என்று பயம்.

சரி! அவள் தன் மைந்தனைக் கேட்க விரும்பியது என்ன? வழக்கம்போலக் கோடை விடுமுறைக்குக் குழந்தைகளுடன் வந்து சேர வேண்டும் என்று பத்மாவுக்குக் கடிதம் எழுதச் சொல்லத்தான் ஆசைப்பட்டாள். கூட இன்னொரு கவலையும் இருக்கத்தான் செய்தது. சென்ற வருஷம் பத்மா கோபப்பட்டுக் கொண்டு போன தோரணையில் இம்முறை கடிதம் எழுதினாலும் வருவாளோ என்பது தான் கவலை. எனினும் அதற்காகப் பேசாமலிருந்துவிடத் தாயுள்ளம் கேட்குமா? எனவே தன் மைந்தனிடம் சொல்லத் தயங்கியதைத் தன் நாட்டுப் பெண்ணிடம் தெரிவித்தாள் பாலம்மாள்.

அதே சமயம் வாசலில் வந்து நின்ற டாக்ஸியிலிருந்து பத்மா - தன் குழந்தைகளுடன் இறங்குவது தெரிந்தது. எல்லாரும் வியப்போடு பார்த்தார்கள்.

"அம்மா! பத்மாவுக்கு ஆயுசு நூறு. உங்கள் பிள்ளை நேற்றுத்தான் பத்மாவுக்குக் கடிதம் எழுதினார், இந்த வீடுக்கு வந்து சேரும்படி. கடிதத்தைப் பார்த்துப் பத்மா எங்கே வராமலிருந்து விடுவாளோ என்று தான் கூடப் பயந்தேன்'' என்றாள் பார்வதி.

உள்ளே நுழைந்து கொண்டிருந்த பத்மா, "அண்ணாவின் கடிதம் இன்றுதான் போகும். அண்ணாவுக்கு உள்ள 'கூடப் பிறந்த பாசம்' எனக்கு மட்டும் இல்லையா? நானும் புறப்பட்டு வந்துவிட்டேன்'' என்றாள்.

பெற்ற தாயின் உள்ளம் நெகிழ்ந்து விட்டது! மனக் கஷ்டத்தையும் பொருட்படுத்தாது தம் தங்கை பத்மா விடுமுறைக்கு வந்து விட்டதில் நம்பீசனும் பரம திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தார். பாசம் அவர்கள் மனக் கசப்பை நீக்கி, இணைத்து விட்டதில் அவர்கள் அனைவருமே மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினார்கள்.

வெள்ளித்திரை

# வெற்றி வீரன்

காந்தன்

மகாகவி பாரதி, "உயர் வீரம் செறிந்த தமிழ் நாடு" என்று பாடினார். அத் தெய்வீக வாக்கு நம் தமிழகத்தின் வெள்ளித் திரையில் நிருபணமாகி வருகிறது. போர்க்களத்தில் வீரர்கள் தோளோடு தோள்கள் பிணைந்து வாளோடு வாள்கள் மோதிப் பொருது வீரத்தை நிலை நாட்டா விட்டாலும், நம் தமிழ்ப் படங்களில் வாள் போர்களும், மற் போர்களும் அதிகரித்து வருகின்றன. "மதுரை வீரன்", "தர்ம வீரன்", "வெற்றி வீரன்" என்று நம் திரைப்பட வீரர்களும் அதிகரித்து வருகின்றனர்.

"வெற்றி வீரன்" கதை மிக மிகப் பழைய கதை. பணத்தாசை கொண்ட ஒரு அரசன், தன் சேனாதிபதி பிரசண்டனின் உதவியினால் மக்களைக் கசக்கிப் பிழிந்து வரி வசூல் செய்து தன் பொக்கிஷத்தை நிரப்புகிறான். துன்புறுத்தப்பட்ட நாட்டு மக்களில் பிரதாபனும் ஒருவன்; அவன் வயோதிகத் தந்தை பிரசண்டனின் வெறியாட்டத்துக்குப் பலியானார். அதைக் கண்டு வெகுண்ட பிரதாபன் "ஏழை மக்களை வாழ வைப்பேன்! தந்தையைக் கொன்றவனைப் பழி வாங்குவேன்" என்று சபதம் செய்தான். அப்புறம் என்ன? ஒரே வாட் போர்தான்! ராஜகுமாரி உமாதேவியின் காதல் ஏழைப் பிரதாபனை நாடி வந்தது; அவனும் அரண்மனைக்கு ஓடிப் போய் அவளைப் பல முறைகள் சந்தித்தான்.

ஜோதி பிலிம்ஸ் தயாரிப்பான இந்தப் படம் தெலுங்கில் எடுக்கப்பட்டுப் பிறகு தமிழில் 'டப்' செய்யப்பட்டிருக்கிறது.

படத்தின் பிரதான பாகமான பிரதாபனாக என். டி. ராமராவ் நடிக்கிறார். சோகம், வீரம், காதல் எல்லாக் கட்டங்களிலும் அவர் நடிப்பு பாதகமில்லை. பிரமாதமாகக் கத்திச் சண்டை போடுகிறார்.

சண்டைப் படம் என்றால் ஒரு 'மவுஸ்' இருக்கத்தான் செய்கிறது. இதே மாதிரி முன்பெல்லாம் வறுமையில் வாடும் வாலிபன் வாழ்விலும், நடன நங்கையின் நாட்டியக் காட்சிகளைச் சிரமப்பட்டுப் புகுத்த வேண்டியிருந்தது. அதற்கு வரவர 'மவுஸ்' குறைகிறது. அதுபோல் சினிமா வாள்களையும் உறைகளிலிட்டு வைக்க வேண்டி வந்து விடுமோ என்று யோசிக்கவேண்டியிருக்கிறது.

"வெற்றி வீரன்" படத்துக்குச் சிறிதளவாவது வெற்றி கிட்டியிருந்தால் அது படத்தின் மூல நட்சத்திரமான அஞ்சலிதேவியையே சாரும் என்பதில் ஐயமில்லை. நடிப்புக் கலையின் நல்ல அம்சங்களையெல்லாம் மனத்தில் நன்றாய் வாங்கிக் கொண்டு பாவத்தோடு நடிக்கிறார் அஞ்சலிதேவி. பாதிப் படத்தில் எழுந்து வந்து விடலாமா என்று துடித்த பலர் அவருடைய நடிப்புக்காகத்தான் கடைசி வரையில் இருந்தார்கள்.

இந்தப்படத்திலும் ஒரு முகமூடி மர்மவீரன் தோன்றுகிறான்; சிறையில் அகப்பட்ட பிரதாபனை விடுவிக்கிறான்; படத்தின் முடிவில் தப்பியோட முயன்ற பிரசண்டனைக் கட்டிப் பிடித்து அரசனிடம் ஒப்படைக்கிறான். அந்த முகமூடி மர்மவீரன் பாகத்தை அஞ்சலி ஏற்று நடித்தது படத்துக்குக் கொஞ்சம் வேகம் கொடுக்கிறது. இதுவரையில் வெளி வந்திருக்கும் எந்த 'வீரன்' படத்தையாவது ஒரு தடவை பார்த்தால் போதும், மற்ற 'வீரன்' படங்களையும் பார்த்தது போலத்தான். முடிவில் வெற்றி கிட்டுவது வீரனுக்குத்தான் யாரும் அவனை மிஞ்ச முடியாது. வீரனுக்குத் தான் ராஜகுமாரி மாலையிடுவாள். துஷ்டர்கள் இறுதியில் தண்டனை பெறுவார்கள். ஆகையினால் இந்த மாதிரிப் படங்களில் ஏதாவது ஒன்றைப் பார்த்து விட்டால் போதுமல்லவா?





# வட்ட மேஜை

ஆகஸ்டு 12ந் தேதி 'கல்கி'யில் கைத்தறித் தொழிலுக்கும் இயந்திரத் தறிக்கும் உள்ள போட்டியைப் பற்றித் தாங்கள் எழுதியிருந்த தலையங்கம் மிகவும் போற்றத்தக்கது. மேலும் சேலத்தில் இந்திய சர்க்கார் உதவி திட்ட மந்திரி ஸ்ரீ எஸ். என். மிஸ்ரா அவர்களுக்கு ஆகஸ்ட் 4—ந்தேதி வாசித்து அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரத்தில் கண்ட விவரப்படி கைத்தறிகளைக் கட்டாய ரிஜிஸ்தர் செய்ய வேண்டும் என்று சர்க்கார் விடுத்துள்ள அறிக்கை கைத்தறி நெசவாளருக்குப் பரபரப்பையூட்டும் விஷயமாகும். கிராமப்புறங்களில் உள்ளவர்களுக்கு அறிக்கையிலுடைய விவரம் என்னவென்று தெரியாது. ஆதலால் கொஞ்ச காலம் அவகாசம் கொடுத்து ஓர் அறிக்கை விடுத்து அதன்படி செய்தால் மிகவும் நன்மையாக இருக்கும். சேலத்தில் நெசவாளர்கள் சமர்ப்பித்த மேற்படி உபசாரப் பத்திரத்தில் கண்டுள்ள எல்லா அம்சங்களும் கைத்தறி நெசவாளர்களைப் பாதுகாக்கும் என நானும் என்னைப் போன்ற கைத்தறி நெசவாளர்களும் கருதி, அதை மனமார வரவேற்கிறோம்.

வெண்ணந்தூர்
13—8—56

வி. வி. ஆர். சாமி

★

அரசாங்க வேலைப் பேட்டிகளுக்கு அழைப்பு அனுப்புவதில் பல தாரதம்யங்கள் காட்டப்படுகின்றன. பட்டதாரிகள், எஸ். எஸ். எல். ஸி. படித்தவர்கள், வேலையில் இருப்பவர்கள் எல்லோரும் அழைக்கப்படுகிறார்கள். அதில் பட்டதாரிகளுக்கும், வேலையில் உள்ளவர்களுக்கும் மட்டும் சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. எஸ். எஸ். எல். ஸி. படித்த மாணவர்கள் மிகக் குறைந்த அளவிலேயே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆனால் பேட்டிகளில் கலந்து கொள்வோர்களில் எஸ். எஸ். எல். ஸி. படித்துத் தேறிய மாணவர்களே அதிகம் என்பது குறிப்பிடத் தக்கது.

வயிற்றுப் பிழைப்புக்காகத் திண்டாடிக் கொண்டிருக்கும் குடும்பத்தில் பிறந்த ஒருவன் எஸ். எஸ். எல். ஸி. க்கு மேல் படிக்க முடிவதில்லை. அதிலும் முன்னேற்றமான ஜாதியாயிருந்தால் (Forward Community) அவன் படிப்புக்கு எவ்விதச் சலுகையும் கிடையாது. ஆகவே அவன் எஸ். எஸ். எல். ஸி. க்கு மேல் படிக்க முடிவதில்லை.

எஸ். எஸ். எல். ஸி. படித்தவர்களுக்கு ஓரளவாவது வேலை கிடைக்க வேண்டுமானால் மேற்குறித்த பட்டதாரிகளும், வேலையில் உள்ளவர்களும் இவர்களுடன் போட்டியிடுவதை நிறுத்த வேண்டும். அல்லது அவர்களுக்குத் தனி இலாகாக்களாவது ஒதுக்க வேண்டும். இல்லா விட்டால் எங்களைப் போன்ற எஸ்.எஸ். எல்.ஸி. படித்துத் தேறிய மாணவர்கள் என்றென்றைக்கும் உத்தியோகம் கிடைக்காமல் திண்டாடித் தெருவில் நிற்பதைத் தவிர வேறு வழியில்லை.

மண்டலமாணிக்கம்
22—8—56

என். எஸ். வி. ராமராவ்
ம. கோ. சிவராமன்

★

புதுக்கோட்டை சமஸ்தானம், தனி அரசாக இருந்த காலத்தில் மேற்படி பிரதேசத்திலும், திருவாங்கூர்த் தமிழ்ப் பகுதிகளிலும், சென்னை அரசாங்கச் சட்டப்படி சித்த வைத்தியர்கள் ரிஜிஸ்தர் (பதிவு) செய்து கொள்வதின் அவசியம் இல்லாமலிருந்து வந்தது. மேலும் அதற்குரிய அவசியமான விளம்பரங்களை அரசாங்கம் செய்யவுமில்லை. இந்நிலைமையில் மேற்படி சமஸ்தானங்கள், இந்திய யூனியன்களில் ஐக்கியப்பட்ட பிறகு அரசாங்கத்தின் சட்ட திட்டங்கள் சித்த வைத்தியர்கள் ரிஜிஸ்தர் இல்லாது தொழில் செய்வதைக் கட்டுப்படுத்தக் கூடியதாக இருக்கின்றன. மேலும் சமஸ்தானங்கள் இந்திய யூனியனில் ஐக்கியப்படுவதற்கு முன்னதாகவே அரசாங்க விதிகளின்படி ரிஜிஸ்தர் செய்யும் காலவரையும் முடிவடைந்து விட்டது. மற்ற சமஸ்தான சர்க்கார் அலுவலகங்களுக்கும், ஸ்தாபனங்களுக்கும், அதில் ஐக்கியப்பட்ட சகல தொழில்களுக்கும், பொது ஸ்தாபனங்களுக்கும் தனி அரசாக இருந்த காலத்தில் உள்ளவைகளைப் போலவே செயலாற்றச் சென்னை அரசாங்கம் பல சலுகைகளை அளித்திருக்கின்றது. அதைப் போலவே, புதுக்கோட்டை பிரதேசத்திலுள்ள சித்த வைத்தியர்களுக்கும், திருவாங்கூர் தமிழ்ப் பகுதிகளிலுள்ள சித்த வைத்தியர்களுக்கும், ஒரு குறிப்பிட்ட காலவரையைச் சென்னை அரசாங்கம் ஏற்படுத்திக் கொடுத்து, தகுதி

## பாரதி பாடல் போட்டி

பம்பாய், பாரதி கலா மன்றத்தின் ஆதரவில் செப்டம்பர் 9-ந் தேதி திரு வி. ராமகப்பன் அவர்கள் (மெம்பர், டாரிப் போர்டு, கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா) தலைமையில் 'பாரதி தினம்' நடைபெறும். பாரதி பாடல் போட்டியில் சேர விரும்பும் சிறுவர் சிறுமியர்கள் (பதினாறு வயதும் அதற்குட்பட்டவர்களும்) தங்கள் பெயரைச் செப்டம்பர் நாலாம் தேதிக்குள் மன்றத்தின் காரியாலயத்தில் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம். பாரதி கலா மன்றம், மோடிமைனர், டிரஸ் ரூம், பிராமண்வாடா ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. பாரதி பாடல் போட்டி செப்டம்பர் ஆறும் தேதி மாலை ஆறு மணிக்கு மன்றத்தின் காரியாலயத்தில் நடைபெறும்.

—எஸ். ராமன் (செயலாளர்.)



ஜனாதிபதி ராஜன் பாபு சென்ற 14—8—56 அன்று சென்னை ராயப்பேட்டையிலுள்ள இந்திய உத்தியோகஸ்தர்கள் சங்கத்துக்கு விஜயம் செய்து மேற்படி சங்கத்தின் புதிய ஹாஸ்டல் கட்டடத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டினார். பின்னர் மேயர் ஸ்ரீ ராமநாதய்யர் சங்கத்துக்கு வழங்கிய திட்டக் கமிஷன் உபதலைவர் ஸ்ரீ வி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களின் திரு உருவப் படத்தை ஜனாதிபதி திறந்து வைத்து அவருடைய இணையற்ற தேச சேவைகளைப் பாராட்டினார். இந்திய உத்தியோகஸ்தர் சங்கத்தின் தலைவர் ஜஸ்டிஸ் பி. கோவிந்த மேனன் அவர்களும், பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்களும் அமர்ந்திருப்பதையும், சங்கத்தின் பொதுக்காரியதரிசி ஸ்ரீ டி.பாலசுந்தரம்சங்கத்தின் அறிக்கையை வாசிப்பதையும் காணலாம்.

யுள்ள சித்த வைத்தியர்கள் அனைவரையும் ரிஜிஸ்தர் செய்யக் கோருகிறேன். இதன் மூலம் பழங்காலத்துச் சித்த வைத்திய முறையைப் பாதுகாக்கும் வகையில் சென்னை அரசாங்கம் உடனடியாக ஆவன செய்ய வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

சென்ற 12—8—56 ல் சென்னையில் ஜார்ஜ் டவுன், பச்சையப்பன் கல்லூரியில் நடந்த மத்திய சித்த வைத்திய கௌன்சிலின் ஆண்டு விழாவின்போது, புதுக்கோட்டை பிரதேசப் பிரதிநிதியாகச் சென்றிருந்த நான் மேற்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளேன்.

புதுக்கோட்டை
22—8—56

டாக்டர் ஆர்.
சௌமிய நாராயணு

★

திருத்துறைப்பூண்டி நகரின் மத்தியில் சுகாதாரக் கேடு உண்டு பண்ணிக் கொண்டிருந்த ஒரு புறம்போக்கு நிலத்திலுள்ள குட்டையை இவ்வூர் பஞ்சாயத்து ஐயாயிரம் ரூபாய் செலவு செய்து மிகவும் சிரமப்பட்டுத் தூர்த்தது. இந்த இடம் 1939-ம் வருஷம் முதல் பஸ் ஸ்டாண்டாக உபயோகிக்கப்பட்டு வருகிறது. மேற்பட இடந்தான் பஸ் ஸ்டாண்டுக்கு வாயக்கான இடம் என்று 11-5-39ல் சர்க்கார் கெஜட்டில் விளம்பரப் படுத்தப்பட்டுள்ளது. 7-10-1939ல் கலெக்டர் அவர்களைத் தலைமையாகக் கொண்ட ரோடு டிராபிக் போர்டினாலும் அங்கீகாரம் பெற்றுள்ளது. பிறகு சுமார் நாலைந்து வருடங்கள் கழித்துப் பஸ் பிரயாணிகளின் சௌகரியத்தை முன்னிட்டு டீக்கடை, பழக்கடைகள் வைத்து வியாபாரம் செய்வதற்கு மேற்படி நாற்பத்தெட்டு சென்டு நிலத்தில் ஒரு பகுதியைச் சில தனிப்பட்ட நபர்களுக்குக் குத்தகைக்குக் கொடுத்து, பஞ்சாயத்துக்கு வேண்டும் போது மேற்படி இடங்களைக் காலி செய்து கொடுப்பதாக ஒப்பந்தம் செய்யப்பட்டது.

இந்த இடத்தைச் சகல உரிமைகளுடன் இவ்வூர் பஞ்சாயத்து அனுபவித்துக் கொண்டிருக்கும் நிலைமையில் கலெக்டர் அவர்களும், அவர்களது சிப்பந்திகளும் 26-11-1953ல் வேண்டுமென்றே குறுக்கிட்டு மேற்படி இடம் சர்க்காருக்குச் சொந்தமான புறம்போக்கு இடம் என்றும் சர்க்காருக்கு வரித் தீர்வை நஷ்டம் உண்டாக்கும் வகையில் அனுபவித்து வருவதானது சரியாகாதென்றும் கூறி மேற்படி இடம் முழுவதையும் பஞ்சாயத்தை அனுபவிக்க விடாமல் செய்து வருகின்றனர்.

இப் பஞ்சாயத்து நிர்வாக அதிகாரி அவர்களைக் கேட்டால் பஞ்சாயத்தின் தீர்மானப்படி நாற்பத்தெட்டு சென்டு நிலத்தையும் வாங்க ரெவின்யூ இலாகாவுடன் கடிதப் போக்குவரத்து நடந்துவருவதாகக் கூறுகிறார்கள். தற்சமயம் சுமார் பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு பகுதி கொடுக்கப்பட்ட இடங்களைக் கடை வைத்து வியாபாரம் செய்யப் பகிரங்க ஏலத்தில் இப்பஞ்சாயத்தானது ஏலம் விட்டால் அதன் மூலம் இப் பஞ்சாயத்துக்குக் குறைந்த பட்சம் வருடம் ஒன்றுக்கு ரூ. 1500 வருமானம் கிடைக்கும் என்பது உறுதி.

ஆகையால் மேற்படி நாற்பத்தெட்டு சென்டு நிலத்தையும் பஞ்சாயத்துக்கே உரிமை செய்து கொடுத்து வெகு சீக்கிரத்தில் பஸ் ஸ்டாண்டு கட்டும்படியான நிலைமையை உண்டாக்க உடனடியாக ரெவின்யூ இலாகா உதவி செய்யும்படி கோருகிறோம்.

திருத்துறைப்பூண்டி
23—8—56

எஸ். ரத்தினம்

# படித்துப் பாருங்கள்

## காஞ்சிக் கோயில்கள்

"தேசமெல்லாம் புகழ்ந்தாடும் கச்சித் திருவேகம்பன் செம்பொற் கோவில்" என்று ஸ்ரீ மாணிக்க வாசகர் மனம் உருகினர். "நகரேஷு காஞ்சி" என்று கவி காளி தாசர் திருவாய் மலர்ந்தருளினர். "முத்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி தன்னில்" என்று ஸ்ரீ வேதாந்த தேசிகர் பரவசம் அடைந் தார். அப்படிப்பட்ட புனித ஸ்தலமான காஞ்சிபுரம் தமிழ் நாட்டின் பண்டைய சரித் திரத்திலும் சிறப்புற்று விளங்கிய நகரமாகும். எட்டுத் திசைகளிலும் திருக்கோயில்களால் சூழப்பட்டுள்ள காஞ்சிமா நகர் அன்றும் இன்றும் மகான்களுக்கும் பல்லாயிரக் கணக் கான பக்த சிரேஷ்டர்களுக்கும் யாத்திரை ஸ்தலமாக இருந்து வருவதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. அத்தகைய மகிமை வாய்ந்த காஞ்சிபுரத்தையும் அங்குள்ள கோயில்களையும் தீர்த்தங்களையும் நேரில் கண்டு களிக்கும் வாய்ப்புக் கிடைக்காதவர் களுக்கு, டாக்டர் எம். கே. ஸ்ரீனிவாசன் இயற்றியுள்ள "காஞ்சிக் கோயில்கள்" என்ற நூல் ஒரு வரப்பிரசாதமாக அமைந் துள்ளது. இந்த நூல், காஞ்சியில் காட்சி யளிக்கும் ஸ்ரீ வரதராஜர் கோயில், திருத் தண்கா, சொன்ன வண்ணம் செய்த பெரு மாள், சித்திர குப்தர், சத்திய விரதேசுவரர், கைலாச நாதர், ஏகாம்பரநாதர், காமாக்ஷி, அஷ்டபுஜம் ஆலயங்கள் அதனதன் மகிமை பற்றிய வரலாறுகளுடனும் ஏராளமான கண் கவர் புகைப்படங்களுடனும் திகழ்கிறது.

கிடைக்குமிடம்: டாக்டர் எம். கே. ஸ்ரீனிவாசன், காஞ்சிபுரம். விலை: ரு 1-0-0.

## Britain - An Official Hand Book

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் மறைந்து விட் டது. எனினும் பிரிட்டன் அரசியல் துறை யிலும், பொருளாதாரத் துறையிலும், ராஜ தந்திரத்திலும் தனக்குள்ள தனிச் சிறப்பை யும் மதிப்பையும் இழந்துவிடவில்லை. இன் றைய உலகில் ஜனநாயக ஆட்சி சிறந்த முறை யில் நடைபெற்று வரும் ஒரு சில நாடுகளில் பிரிட்டனும் ஒன்றாகும். ஜனநாயக ஆட்சி யின் முக்கிய அம்சமான அரசியல் கட்சிகள் பிரிட்டனில்தான் சிறந்த முறையில் பணி யாற்றி வருகின்றன. தொழில் துறைகளின் முன்னேற்றத்திலும் அமெரிக்காவுக்கு அடுத்த படியாக பிரிட்டனைக் குறிப்பிடலாம். உலகம் முழுதும் முடியரசு மறைந்து குடி யரசு ஏற்பட்டு வரும் இக்காலத்தில் கூட, பிரிட்டிஷ் முடியரசு பெருமை குன்றாமல் இருந்து வருவது வியப்பல்லவா? பிரிட்டனில் உள்ள கலாசாலைகளில் வாசிக்கும் மாணவர் களில் பெரும்பாலோர் பொது நிதியிலிருந்து உதவி பெறுகிறார்கள். பிரிட்டிஷ் கலாசாலை களில் பயிற்சி பெறுவதற்காக வெளி நாடுகளி லிருந்து வருஷந்தோறும் சுமார் பதினாயிரம் மாணவர்கள் செல்லுகிறார்களெனில், பிரிட் டிஷ் கல்லூரிக் கல்வியின் உயர்வைத் தெரிந்து கொள்ளலாம். இது போலவே, விஞ்ஞானம், கலைகள், கப்பல் போக்குவரத்து, பாங்கிகள் நிர்வாகம், உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்த கம், நகர அபிவிருத்தி முதலிய மற்றும் பல வேறு அம்சங்களிலும் பிரிட்டன் சிறந்து விளங்குகிறது. சகல துறைகளிலும் பிரிட்ட னின் முன்னேற்றத்தைப் புள்ளி விவரங்க ளுடன் ஆதார பூர்வமாக எடுத்துக் காட்டும் கண்ணாடிபோல், "பிரிட்டன்" என்ற நூல் விளங்குகிறது. முக்கியமாக வெளி நாட்டி னரின் உபயோகத்துக்காக பிரிட்டிஷ் சர்க்கார் விளம்பர இலாகா வெளியிட்டுள்ள இந்த ஆங்கில நூலில், பிரிட்டனைப் பற்றிய எந்தக் கேள்விக்கும் பதில் அடங்கியிருக்கிறது.

கிடைக்குமிடம்: British Information Services, Eastern House, Mansingh Road, New Delhi. இந்த நூலின் 1956ம் வருஷ சாதாரண அட்டைப் பதிப்பின் விலை: ரூ. 5-10-0. உயர்ந்த பதிப்பு ரூ. 11—4—0.

## புதிய ஹிந்து வாரிசு உரிமைச் சட்டம்

சில மாதங்களுக்கு முன் லோக சபையில் நிறைவேறிய ஹிந்து வாரிசு உரிமைச் சட்டம் ஹிந்து சமூகத்திலேயே புரட்சிகரமான மாறு தலை உண்டாக்கி யிருக்கிறது. வெகு கால மாகச் சமூகத்தில் இருந்து வந்த வாரிசு நியதி களை அந்தச் சட்டம் அடியோடு மாற்றி விட்ட தல்லவா? எனினும் மேற்படி சட்ட விவரங் கள் என்ன என்பதை எல்லோரும் தெளி வாகத் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. அச் சட்டத் தின் விதிகளையும் நுணுக்கங்களையும் அறிந்து கொள்ள விரும்புவோருக்கு, "புதிய ஹிந்து வாரிசு உரிமைச் சட்டம்" என்ற நூல் மிகவும் உதவியாக இருக்கும் என்பதில் ஐய மில்லை. ஆங்கிலத்தில் உள்ள மேற்படி சட் டத்தை ஸ்ரீ ஆர். ஜி. ராஜன், பி. எஸ். ஸி., பி. எல்., அருமையாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

கிடைக்குமிடம்: வேல் புத்தக நிலையம், 69 பீட்டர்ஸ் ரோடு, சென்னை-6, விலை: ரூ 1—0—0.

## ஸ்ரீ கோவிந்தராஜ ஸுப்ரபாதம்

தொண்டரடிப் பொடி ஆழ்வார் பெரிய பெருமாளைத் "திருப்பள்ளி யெழுச்சி" என்னும் திவ்யப் பிரபந்தத்தினால் புகழ்ந்து பாடியிருப்பது பக்தர்கள் யாவரும் அறிந்த தாகும். அது போலவே தில்லை ஸ்ரீ கோவிந்த ராஜப் பெருமானைக் குறித்து, திருச்சித்திர கூடம் அஷ்டகோத்ரம் வித்வான் ஸ்ரீ உ. வே. வெங்கடாசார்ய ஸ்வாமி "ஸ்ரீ கோவிந்த ராஜ ஸுப்ரபாதம்" என்ற தோத்திர கிரந்தத்தை அருளிச் செய்திருக்கிறார். இதில் உள்ள சுலோகங்களுக்கு எளிய நடையில் அவரால் உரையும் எழுதப்பட்டுள்ளது.

கிடைக்குமிடம்: சிதம்பரம் ப்ரொவிஷன் ஸ்டோர்ஸ், சிதம்பரம். விலை குறிப்பிடவில்லை.

# வீரனின் பரிசு

ஜீலம் நதிக்கரையில் நிகழ்ந்த பெரும் போரின் இறுதியில் இரு பெரும்வீரர் நட்புரிமை பூண்டு சந்தித்தனர். அவர்கள் அலெக்சாந்தரும் புருஷோத்தமனும் ஆவர்.
மேற்கும் கிழக்கும் வீரத்திலே பிணைப்புண்ட
அந்த சரித்திரப் புகழ் பெற்ற வேளையில்
புருஷோத்தமன் அலெக்சாந்தருக்குப்
பரிசாக அளிக்க பாரத நாட்டின் எண்ணற்ற
நிதிக்குவியைவிட முப்பது ராத்தல்
எஃகையே தகுதியுற்றதாக கருதினான்.



இது 2300 ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. அன்றே இந்தியா சிறந்த எஃகின் இருப்பிடமாகப் புகழுற்றிருந்தது. இன்று மறுமுறையும் எஃகு நாட்டின் கவனத்தில் முதன்மையுற்றிருக்கிறது. இந்தியாவின் தொழில் முன்னேற்றத்திற்கு உறுதியான அடிப்படை நிறுவ நாட்டின் எஃகு உற்பத்தி விரைவாக பெருக்கப்பட்டு வருகிறது.

**டாடா ஸ்டீல்** நாட்டின் பணிக்கே

TN 100




### பதின்மூன்றும் அத்தியாயம்

## திருமணக் கோலாகலம்!

"**வ**லம்புரித் தீவின் அரச குமாரி தரங்கவல்லிக்குக் கல்யாணம் என்ற செய்தியைக் கேட்டதும் சந்திரசூடனுடைய மனம் என்ன பாடு பட்டிருக்கும் என்பதை உங்களுடைய யூகத்துக்கு விட்டு விடுகிறேன் இளவரசே!'' என்றார் சமணத் துறவி சித்திராங்க பூபதியைப் பார்த்து. பூபதி பதிலே பேசவில்லை. சந்திரசூடனுடைய மனநிலையைப் பற்றிய எண்ணம் சித்திராங்க பூபதியைப் பேச்சில்லாமல் செய்து விட்டது. துறவி தமது கதையைத் தொடர்ந்தார்.

''வலம்புரித் தீவில் ஒரே திருவிழாக் கோலாகலம். தரங்கவல்லிக்கும் பாண்டிய அரசகுமாரனுக்கும் கல்யாணம் என்று அந்த ராஜ்யம் முழுவதுமே குதூகலப்பட்டது!'' என்று பேச ஆரம்பித்த சமணத் துறவி, திருமண ஏற்பாடுகளை வர்ணிக்கும் போது தம்மை மறந்த ஒரு லய உணர்ச்சியிலே பேச ஆரம்பித்தார்.

''வலம்புரி இளவரசே! உங்கள் குலத்துக்கும், பாண்டிய குலத்துக்கும் பல்லாண்டுகளாகவே திருமண உறவு இருந்து வந்திருக்கிறது என்றாலும், தரங்கவல்லியின் திருமணத்துக்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளைப் போல அதற்கு முன்பு அந்தத் தீவு கண்டதுமில்லை; கேட்டதும் இல்லை! தரங்கவல்லி என்ற அந்த எழில் மோகினியின் அழகு கடல் கடந்து சென்று செந்தமிழ் நாடெங்கும் புகழ் பரப்பியிருந்தது! அவளுடைய அழகைக் கேள்விப்பட்டுத்தான் பாண்டிய அரசகுமாரனுக்கு இந்த அழகியை மணம் முடிக்க வேண்டும் என்று மதுராபுரியிலே தீர்மானம் ஆயிற்றும்! பாண்டியனுடைய தலைமை அமைச்சரே வலம்புரித் தீவுக்குச் சென்று இந்தத் திருமண உடன்படிக்கையை முடிவு செய்தாராம். என்றாலும் அரசியல் நுட்பங்களை நன்றாக அறிந்த பிரதானிகளின் மத்தியில், இந்தத் திருமணத்தைப் பற்றி வேறு விதமாகவும் பேசிக் கொண்டார்கள். பல்லவ மன்னர்களின் செல்வாக்கும், படைபலமும் நாளுக்கு நாள் அதிகரித்து வந்ததால், பாண்டியர்கள் பல்லவர்களுக்கு எதிராகப் படைபலம் திரட்டி வந்தார்கள் என்றும், வலம்புரித் தீவோடு இப்படி ஒரு திருமணம் செய்து கொண்டு விட்டால், பாண்டியர்கள் அந்தத் தீவைத் தங்களுடைய படை விஸ்தரிப்புக்கு ஓர் இரகசிய தளமாக உபயோகித்துக் கொள்ளலாம் என்றும் அரசியல் வட்டாரங்களில் பேசிக் கொண்டார்கள். அக்காலத்தில் பாண்டிய வேந்தனாக வீற்றிருந்த கோச்சடையன் ரணதீரன் என்ற பேரரசன், சோழ நாட்டையும் கருநாட தேசத்தையும், கொங்கு நாட்டையும் கைப்பற்றி, இந்த அரசர்களைத் தனக்குத் திறை செலுத்துமாறு செய்திருந்தான். அவனுடைய ஆட்சியின் விரிவு படிப்படியாகப் பெருகிக் கொண்டு வந்தது. எனவே இப்பொழுது வலம்புரித் தீவோடு இப்படி ஒரு திருமண உறவு செய்து கொண்டதற்குங்கூட அரசியற் காரணங்கள் இருந்ததாகப் பிரதானிகள் பேசிக் கொண்டதில் வியப்பில்லை அல்லவா! எந்தக் காரணம் எப்படியிருந்தாலும், பாண்டிய மன்னன் இந்தத் திருமண உறவை



மிகவும் மதித்தான் என்பது, அவன் திருமணத்திற்காக அனுப்பிய பொருள்களிலும், சீர் வரிசைகளாக வலம்புரி அரசகுமாரிக்குப் பாண்டியன் அனுப்பிய விலை மதிக்க முடியாத முத்து மாலைகளிலும், நவரத்தின ஆபரணங்களிலும் நன்றாகத் தெரிந்தது!

திருமணத்துக்கு என்று பாண்டிய நாட்டிலிருந்து மட்டுமல்லாமல், செந்தமிழ் நாட்டின் குறுநில மன்னர்களிடமிருந்தும் பல வெகுமதிப் பொருள்கள் ஒரு மாதத்துக்கு முன்பிருந்தே வலம்புரித் தீவுக்கு வந்துகுவிய ஆரம்பித்தன. அக்காலத்தில்

பழையாறையிலிருந்த சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் சம்பந்தி உறவு இருந்து வந்ததால், பழையாறையிலிருந்தும் ஏராளமான வெகுமதிகளும் சீர் வரிசைகளும் வந்தன.

திருமண விழாவுக்கு ஒரு மாதத்துக்கு முன்பிருந்தே அந்தக் கருநீலக் கடலிலே விதம் விதமான அலங்காரங்களோடு மரக்கலங்கள் வந்து சூழ ஆரம்பித்தன. மீனக் கொடிகளும் புலிக் கொடிகளும் கடல் நீரில் ஒரு பூஞ்சோலை வளர்ந்து நின்றது போல நெருக்கிக் கொண்டு காட்சி தந்தன. பெரிய பெரிய மரக் கலங்களுக்குமத்தியிலே, தொலை தூரத்து வணிகர்கள் அரச விசுவாசத்தோடு அனுப்பிய வெகுமதிப் பொருள்களைத் தாங்கிக் கொண்டு சிறு சிறு மரக்கலங்கள் கரையோரமாக மிதந்தன. 'பரிமுக அம்பி' என்று பெயர் பெற்ற குதிரை முகப் படகுகளும், 'கரிமுக அம்பி' என்று பெயர் பெற்ற யானைமுகப் படகுகளும், 'மரிமுக அம்பி' என்று பெயர் பெற்ற சிங்கமுக மரக்கலங்களும் வலம்புரித் தீவைச் சுற்றி மிதந்த காட்சியானது, நேத்திரானந்தமான காட்சியாக இருந்தது! வலம்புரித் தீவின் துறைமுக வாயிலிலே, ஈசர நாட்டு யானைகள் மலை மலையாக வந்து இறங்கின. பெரிய பெரிய அகிற் கட்டைகள், மாபெரும் தந்தங்கள், தோகை மயில்கள், நன் முத்துக்கள், விலை மதிப்பில்லாத இரத்தினங்கள், முதலியன கலங்களிலும், தோணிகளிலும், மிதவைகளிலும், நாவாய்களிலும், இமில்களிலும் வந்தன. தென் கடல் முத்துக்களோடு, கிழக்குக் கடலின் பவளங்களும், மரகதக் கற்கள் பதித்த யவனத்துப் பேழைகளும், பாவை விளக்குகளும், நூற்றுக் கணக்காகக் குவிந்தன! கோசிகம், பீதகம், அரத்தம், நுண்டுகில், பாடகம், கோங்கலர், வேதங்கம், பரியட்











''காட்லிவர் ஆயில் மாத்திரை சாப்பிட்டாயாடா? என்ன செய்கிறாய்?''
''இரு அம்மா! இருக்கிறதிலே சின்ன மாத்திரையாகப் பொறுக்கிச் சாப்பிடறேன்.''

---

டக்காகை, புங்கர்க் கழகம், சில்லிகை, பங்கம், தந்தியம், வண்ணடை, இருக்கு, குச்சரி, இறஞ்சி, இரட்டு, என்றெல்லாம் பல பெயர்களிலே புகழ் பெற்ற தமிழ் நாட்டின் தொன்மையான பலவகை ஆடை வகைகள் மாபெரும் பேடகங்களிலே வந்து சேர்ந்தன. பாண்டிய மன்னன் அனுப்பிய மீனக் கொடி தாங்கிய மரக்கலத்தில், மணமகளுக்காக வந்த விலையுயர்ந்த ஆபரணங்களோ வலம்புரித் தீவை வியப்புக் கடலிலே கரைகாணாமல் மிதக்கச் செய்தன! இரண்டு பக்கமும் யானைகள் தாமரை மலரை நீட்டி நிற்க, நடுவே மலர்மகளின் உருவம் பதித்த **தெய்வவுத்தி** என்ற ஆபரணங்களும், அங்காந்த வாளைமீன் வடிவில் செய்த **வாளைப் பகுவாய்**, வலம்புரிச் சங்கின் வடிவிலே செய்த **வலம்புரி**, **பொன்னரி மாலை**, **பாதசரம்**, **மகரக் குழை**, **நவரத்தினப் பதக்கம்**, **இழை** முதலிய நூற்றுக் கணக்கான ஆபரணங்கள் மணமகள் தரங்கவல்லி என்ற சுந்தரிக்குச் சீர் வரிசைகளாக வந்தன! பாண்டிய அரச குமாரன், மணமகன், வந்து இறங்கிய அரச மரக்கலத்தைச் சுற்றிச் சிறு சிறு மரக்கலங்களில் அமைச்சர்களும், தனபதிகளும், உறவினர்களும் வந்தார்கள். இவர்களோடு தையல் வேலையில் தேர்ந்த **துன்னர்**களும், கூத்தாட்டத்தில் நிபுணர்களான **வைரியர்**களும், குதிரையோட்டுவதில் சாமர்த்தியசாலிகளான **வாதுவர்**களும், யானையோட்டும் **பாகர்**களும், ரதம் செலுத்தும் **சாரதி**களும் அணி அணியாக வந்தார்கள். இவர்களைத் தவிர சிவாலயங்களில் பூஜை செய்யும் குருக்களும், விஷ்ணு ஆலயங்களில் பூஜை செய்யும் நம்பி பட்டர்களும் வந்தார்கள்.

வலம்புரித் தீவு ஒரே இந்திரலோகப் பட்டினமாக இருந்தது! ஒரு மாதத்துக்கு முன்பிருந்தே வாத்தியங்களின் கோஷமும், நாட்டியச் சிலம்புகளின் இன்னொலியும், ரதங்களின் ஓட்டமும், மக்களின் கூட்டமுமாக வீதியெல்லாம் ஒரே ஆட்டமும் பாட்டுமாக இருந்தன!

ஆனால் நீலமேக யாழ்ப்பாணருடைய வீட்டிலோ?

திருமண விழாவில் வலம்புரி அரச குடும்பத்தின் பரம்பரை வழக்கப்படி மங்கலச் சடங்கின்போது, தேவதைகளை ஆவாகனம் செய்வதற்காகப் பேரியாழைப் பக்தி பூர்வமாக வாசிக்க வேண்டிய புண்ணிய கைங்கரியம் உண்டு! எத்தனையோ பல ஆண்டுகளாக இந்தச் சடங்கைச் செய்து வருகிற குடும்பம் நீலமேக யாழ்ப்பாணரின் குடும்பம்! இப்பொழுது நீலமேக யாழ்ப்பாணர் அந்தச் சடங்கை நடத்துவதற்காக அரச மாளிகைக்குச் செல்ல வேண்டும். அரச குமாரியின் திருமணத்துக்கு ஒரு மாதம் இருக்கும் போதே, இப்பொழுதே, அரச மாளிகையிலிருந்து பரிவட்டத்தோடு குருக்கள் வந்து சம்பிரதாயப்படி இந்த அறிவிப்பைச் சொல்லிப் போனார். அந்த வினாடியிலிருந்து நீலமேக யாழ்ப்பாணருக்கு மன அமைதி இல்லை!

அரசகுடும்பத்தாரின் திருமணத்துக்கு யாழ் வாசிக்கும் உரிமை என்றால் சாமானியமா! அதே சமயம் எத்தகைய பெரும் பொறுப்பு அது! அந்த யாழ் வாசிப்பின் மூலம் தேவதைகள் மனம் மகிழ்ந்து செய்கிற ஆசீர்வாதம் அல்லவா, அரச குடும்பத்தையும் ராஜ்யத்தையுமே பாதுகாக்க வேண்டும்! இப்படிப்பட்ட மகத்தான உரிமையைப் பெற்ற நீலமேக யாழ்ப் பாணருக்குப் பிறகு சந்ததியில்லையே! இன்று வயோதிகத்தின் தளர்ச்சியினால் யாழ் வாசிப்பதையே படிப்படியாக நிறுத்தி வருகிறார் பாணர்! இந்நிலையில் இந்தக் கல்யாணத்தில், உள்ளத்தையும் உடம்பையும் ஒடுக்கிப் புனித யோக முறையைப் போன்று யாழ் வாசிக்க வேண்டுமே! அதற்குத் தன்னுடைய உடலின் தளர்ச்சி இடம் கொடுக்குமா? வயோதிகப் பருவத்தின் முதுமையிலே விரல்கள் வேகத்தோடு ஸுஸ்வரமாக அந்தப் பெரிய யாழின் தந்திகளிலே தவழ்ந்து பேசவேண்டுமே! நீலமேக யாழ்ப்பாணருக்கு இந்த நினைப்பு அச்சத்தைக் கொடுத்தது.

கடந்த சில மாதங்களாகவே நீலமேக யாழ்ப்பாணர் அம்மன் கோவிலின் இசைப் பணியைத் தமது சிஷ்யனிடம் ஒப்படைத்திருந்தார். ஏதோ அவனோடு சென்று அமருவாரே ஒழிய, யாழ் வாசிப்பதெல்லாம் சந்திரகுடன் தான். எனவே இந்தத் திருமணச் சடங்



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



## காால்கேட்
### பெர்பியூம்டு காஸ்டர்
## ஹேர் ஆயில்

---

# உங்களுக்குத் தேவை




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர், பெங்களூர், திருவனந்தபுரம், கோயம்புத்தூர், கொச்சி

குக்கும் அவனையே யாழ் வாசிக்கும்படி செய்து விட்டால் என்ன? இந்த நினைப்பு வந்ததும் மறுகணம் இதற்கு ஓர் ஆட்சேபணையும் நினைவுக்கு வந்தது! திருமணச் சடங்கிலே யாழ் வாசிக்கிற புண்ணிய உரிமை நீலமேக யாழ்ப்பாணருக்கு உண்டு; அவருடைய சந்ததிக்கும் உண்டு. ஆனால் அந்த உரிமை சந்திரசூடனுக்கு எப்படிக் கிடைக்கும்? சிஷ்யனாக இருந்தால் மட்டும் போதாதே. பரம்பரை உரிமையல்லவா அந்த அரசாங்க உரிமை!

பாணருக்கு ஆண் மகவு இல்லை. அவருடைய மகன், மகள் எல்லாம் சாருகேசிதான். இந்த நிலையில் அவருக்குச் சந்ததி என்று ஒருவன் உண்டு என்றால், சாருகேசியைக் கைப் பிடிக்கிறவன் தான்! அவனுக்கும் அவனுடைய குழந்தைகளுக்கும் இந்த உரிமை போய்ச் சேரும். எனவே, நீலமேக யாழ்ப்பாணர் நினைத்தார்: தம்முடைய நெடு நாளைய ஆசையை இப்பொழுது நிறைவேற்றி விட்டால் என்ன? தரங்கவல்லியின் திருமணத்துக்கு முன்பே சாருகேசிக்கும் சந்திரசூடனுக்கும் திருமணத்தை முடித்து விட்டால், தமது மருமகனே திருமணச் சடங்கில் பங்கு கொள்ளலாம் அல்லவா? அப்படியில்லாவிட்டால், வயோதிகப் பருவத்தில் அத்தனை பெரிய பொறுப்பில் தான் சிக்கிக் கொண்டு, தளர்ச்சி காரணமாக வாசிப்பிலே ஏதாவது பிசகு நேர்ந்து விட்டால் தேவதா கோபம் அல்லவா உண்டாகி விடும்!

இவ்வாறு எண்ணிய அந்த உத்தமப் பெரியார், ஒரு நாள் மாலை தமது சிஷ்யன் சந்திரசூடனைத் தனியாக அழைத்துக்கொண்டு, வலம்புரி அம்மன் கோவிலை அடுத்த கடல் மணற்பரப்பிலே வந்து அமர்ந்தார்.

"தம்பீ! உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்!" என்று ஆரம்பித்தார் நீலமேக யாழ்ப்பாணர்!

## பதினைன்காம் அத்தியாயம்

# இசை குழம்பியது!

சந்திரசூடனிடம் யாழ்ப்பாணர் தனியாகப் பேசிய பேச்சு, அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை! ஏனென்றால், என்றாவது ஒரு நாள் தனது குருநாதர் இந்த விஷயத்தைத் தன்னிடம் பேசத்தான் போகிறார் என்று அவனுக்குத் தெரியும். என்றாலும் இத்தனை நெருக்கடியான தருணத்தில் இந்தப் பெரிய பிரச்னைக்குத் தான் விடை சொல்ல வேண்டியது ஏற்படும் என்று அவன் நினைக்கவில்லை!

"குருநாதரே! நாளைக் காலையில் என்னுடைய பதிலைச் சொல்கிறேன்!" என்றான் சந்திரசூடன். பெரியவருக்கு இந்தப் பதிலைக் கேட்கக் கஷ்டமாக இருந்தது. தான் சொன்னதும் உடனே ஒப்புக் கொண்டு விடுவான் என்று எதிர்பார்த்திருந்த பெரியவருக்கு, இம்மாதிரி யோசித்துப் பதில் கூறுவதாகச் சந்திரசூடன் சொன்னது திகைப்பையே கொடுத்தது. ஆனாலும் திகைப்பை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை. 'யோசித்தாவது தன்னுடைய விருப்பத்துக்குச் சம்மதித்தால் சரிதான்' என்று திருப்திப்பட்டுக் கொண்டார். பெரியவரின் இந்த மனப் போராட்டத்தைச் சந்திரசூடனும் கவனித்துக் கொண்டான்.

அன்றிரவு சந்திரசூடன் சரியாக உறங்கவில்லை. ராஜசிம்ம பல்லவனுடைய யோசனைப்படி வலம்புரித் தீவுக்கு வந்திருக்கிறான் அவன்! வந்த இடத்தில் வந்த காரியமான யாழ்ப் பயிற்சி, எவ்வித இடையூறுமின்றிச் செவ்வனே நடைபெற்று விட்டது. ஆனால் நீலமேக யாழ்ப்பாணருக்குத் தான் செலுத்த வேண்டிய குரு காணிக்கையோ, சற்றும் எதிர்பாராத விதத்தில் இருக்கிறது! தன்னையே அவருக்கு மருமகனாகக் கொடுக்க வேண்டிய நிலைமையல்லவா ஏற்பட்டிருக்கிறது!—இப்படி நினைத்தான் சந்திரசூடன். அதே சமயம் தரங்கவல்லியைச் சந்தித்த அந்தச் சம்பவம் அவனுடைய கண் முன்னே நின்றது!. கொடும்பாளூரின் அரச குடும்பத்தைச் சேர்ந்த தனக்கு, இந்த ஒப்புயர்வற்ற அழகியான தரங்கவல்லியை மணம் செய்து கொள்ளும் பாக்கியம் கிடைத்தால் எப்படியிருக்கும்! ஆனால் அந்த ஆசையிலே தான் மண் விழுந்து விட்டதே! இப்பொழுது பாண்டிய அரச குமாரன் அல்லவா அவளை மணக்கப் போகிறான்! ஒரு கணப் பார்வையில் தன் உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்டு விட்ட அந்த அழகியைக் கடலுக்கப்பாலிருந்து இன்று வந்திருக்கிற பாண்டிய அரச குமாரன் திருமணம் செய்துகொள்ளப் போகிறான்! அந்தத் திருமணத்துக்குத் தானே தன் கைப்பட

யாழ் வாசிக்க வேண்டுமாம்! எப்படியிருக்கிறது?

இவ்வாறு எண்ணிய சந்திரசூடனின் மனக்கண் முன்பு, சாருகேசியின் கள்ளங் கபடம் இல்லாத பரிசுத்தமான பளிங்கு வதனம் வந்து நின்றது.

"எத்தனை தங்கமான பெண் இந்தச் சாருகேசி. இசையிலே பிறந்த கன்னி! பேரியாழின் இசையைப் போன்று பவித்திரமானவள் அவள்! ஆனால் தன்னுடைய உள்ளம் மட்டும் ஏன் தன் கைக்கு எட்டாத அந்தத் தரங்கவல்லியையே நினைத்து நினைத்து ஏங்குகிறது! எத்தனை விபரீதமான ஆசை அது! எத்தனை பாபமான எண்ணம் அது!"—இப்படி நினைத்ததும் சந்திரசூடனுக்கு நெஞ்சிலே முள் குத்துவது போல இருந்தது.

"உயிருக்கு ஒப்பான பேரியாழ்ப் பயிற்சியைத் தனக்கு அன்போடு வழங்கிய குருநாதனின் குமரி சாருகேசி. அந்தக் குருநாதரோ மனம் மொழி செயல் மூன்றிலும் அந்த மகளையே ஜீவனாக வைத்து வாழ்கிறார். இந்த வயோதிக நிலையில், முதிர்ந்து பழுத்து உதிர்ந்துவிடக் கூடிய அந்த இசைக் கனியான பாணருக்குத் தன்னையே அர்ப்பணமாகக் கொடுத்து விடுவதை விட வேறு என்ன சிறந்த கடமை உண்டு, இந்த வாழ்க்கையில்!"

இப்படிப் பலவாறாக எண்ணமிட்டுக் கொண்டே இரவு முழுதும் நித்திரையின்றிக் கழித்தான் சந்திரசூடன். மறுநாட் காலை எழுந்து சென்று பாணர் இருந்த அறைக்கு வந்தால், அவரும் இரவு முழுதும் தூங்காமல் விழித்துக் கொண்டேயிருந்ததற்கு அடையாளமாகக் கண்கள் சிவந்து போய்க் கூனிக் குறுகித் திண்டிலே சாய்ந்திருந்தார். அருகில் சாருகேசி கவலையோடு நின்று கொண்டிருந்தாள். அந்தக் காட்சி மனத்தை உருக்கியது, சந்திரசூடனுக்கு! "குருநாதா!" என்று சொல்ல வந்த சந்திரசூடன் தன்னையும் மீறித் தயங்கினான். "மாமா" என்று அழைத்துக் கொண்டே பாணருக்கு அருகிலே சென்றான். அந்த எதிர்பாராத அழைப்பு, திண்டிலே சாய்ந்திருந்தவரை நட்டமாக எழுந்து நிமிரச் செய்தது!

"சந்திரசூடா" என்று சொல்லும் போதே குரலில் பாசம் சுரந்தது, நீலமேக யாழ்ப்பாணருக்கு!

அவ்வளவுதான். இரண்டே நாட்களில் பௌர்ணமி இரவில் சந்திரசூடனுக்கும், சாருகேசிக்கும் பாணர்களின் சம்பிரதாயப்படி வலம்புரி அம்மனின் சந்நிதியிலே திருமணம் நடந்தது. தரங்கவல்லியின் திருமணத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்பே, சந்திரசூடனின் திருமணம் புனிதமான சூழ்நிலையில் அமைதியான பாணரின் சாந்தமான அரவணைப்பில், வலம்புரி அம்மனின் ஆசிக் கூடத்திலே நடைபெற்று முடிந்தது.



"வா அண்ணே, பிச்சைக்குக் ஏளம்பசம். கம்பைப் பிடிச்சுக்கோ......இன்று குருடாக இருக்க வேண்டியது உன் முறை!"

சந்திரசூடனும் சாருகேசியும் இல்லறம் நடத்தத் தொடங்கி, நீலமேக யாழ்ப்பாணரின் முதிர்ந்த கண்களுக்குக் குளுமை யூட்டினார்கள்! வயோதிகத்தின் தளர்ச்சியையும் மீறி, அன்பும் அமைதியும் தருகிற புதிய ஆற்றலிலே தெம்போடு வளைய வந்தார் நீலமேக யாழ்ப்பாணர்! ஆனால் அந்தத் தெம்பு அத்தனை அற்பாயுளாகப்போகும் என்று அவர் எதிர்பார்த்தாரா?

ஆமாம்; நீலமேக யாழ்ப்பாணரின் அமைதி நீண்ட நாள் நிற்கவில்லை! சாருகேசியும் சந்திரசூடனும் ஒரு மாத காலம் அமைதியான முறையில் கிழவரின் உள்ளம் களிக்கும் வகையில் இல்லறம் நடத்தி வரும் போதே, தரங்கவல்லியின் திருமணம் அத்தனை அமைதிக்கும் ஒரு பெரிய வினையாக வந்து சூழ்ந்து விட்டது!

ஒரு மாத காலம் அரசத் திருமணத்துக்கு ஏற்பாடுகள் நடந்தால், எப்படியிருக்கும்! மணமன்றத்தில் அரசர்கள், மண்டலாதிபதிகள், அமைச்சர்கள், ஆமாத்தியர்கள், தளபதிகள் என்று ஒரே பிரதானிகளாகக் கூடியிருந்தால் அந்தக் காட்சியும், அதற்கு வேண்டிய சூழ்நிலை ஏற்பாடுகளும் சொல்லவா வேண்டும்! தமிழ் நாட்டுக்கே உரிய நாகஸ்வர வாத்தியங்களும், மாதர்

களின் மங்கள கீதங்களும், நாட்டியப் பெண்மணிகளின் சிலம்பொலியும் மண மன்றத்தைச் சுற்றி இன்ப ஒலியுலகை ஏழு ஸ்வரங்களிலே நிர்மாணித்தன!

பாண்டிய அரசகுமாரன் வழி வழியாக வந்த அரசப் பெருமிதத்தோடு, முகத்தில் இன்பப் புன்னகை தவழ்ந்தவனாக, அரச ஆடம்பரத்தோடு வந்து மன்றலில் அமர்ந்தான். திருமணச் சடங்கு ஆரம்பம் ஆயிற்று!

மணமன்றத்தில் யாழ் வாசிப்பதற்கு என்று நீலமேக யாழ்ப்பாணருக்கு அருகிலே பேரியாழைத் தாங்கியவனாகச் சந்திரசூடன் அமர்ந்திருக்கிறான். சிஷ்யன் என்ற உரிமையையும் கடந்து, நீலமேக யாழ்ப்பாணரின் சந்ததி என்ற குடும்ப பாத்தியதை வாய்ந்தவனாக இப்பொழுது சகல உரிமைகளோடும் அமர்ந்திருக்கிறான் அவன்! மங்கல நாண் ஆசிகளோடு வந்தது, மணத் தவிசை நோக்கி! தேவதைகளை ஆவாகனம் செய்கிற புனிதமான சடங்கு தொடங்கிற்று. சந்திரசூடன் யாழ் வாசிக்க ஆரம்பித்தான். அரச குடும்பத்தின் வாழ்வுக்காகவும், அந்தத் தீவின் மங்கலக் காவலுக்காகவும் தேவதைகளைப் பக்தியோடு வேண்டித் துதித்து வரவேற்புச் செய்கிற புனிதமான இசை யாழிலிருந்து எழுந்து ஒலிக்க ஆரம்பித்தது. கண் இமைகளை மூடி ஒரே பக்தி பரவசத்தோடு அந்த இசையை இரண்டு செவிகளிலும் வாங்கித் தேக்கிப் பேரின்ப வயத்தில் அருகிலே அமர்ந்திருக்கிறார் நீலமேக யாழ்ப்பாணர்! அவருடைய முகத்தில் ஓடிய பேரின்ப உணர்ச்சிகளைப் பார்த்தால், பேரியாழிலே தமது மாணவனும் மருமகனுமான தம்முடைய சந்ததியாளன் வாசித்த இசைக்கெல்லாம் மொழி பெயர்ப்பாக இருந்தது அந்தப் பெருமிதமான வயோதிகப் பாணரின் முகம்! அப்பொழுது பெண்களின் குரவை ஒலித்தது! மணப்பெண் மணத் தவிசை நோக்கிச் சேடியர்கள் புடைசூழ வந்தாள்! மானின் விழியைப் பெற்ற மயில் போலவும், மின்னலின் மேனியைப் பெற்ற சந்திரபிம்பம் போலவும், தாமரை முகத்தைத் தாங்கும் வஞ்சிக் கொடி போன்றும், அன்னநடை நடந்து வரும் ஓவியப் பாவையாக வந்தாள் தரங்கவல்லி!

இதுவரை யாழிலே மனத்தைச் செலுத்திக் கொண்டு தன்னையும் தனது சூழலையும் மறந்திருந்த சந்திரசூடன் இப்பொழுது அவனையும் மீறிய ஆவலிலே யாழிலிருந்த பார்வையைச் சற்று மேலே உயர்த்தி, மணப் பெண்ணைப் பார்த்தான்! நீலமேக யாழ்ப்பாணருக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை, மூடியிருந்த விழிகளைத் திறந்து தமது சீடனை மருமகனை ஒரு தரம் பார்த்தார். பாதையிலிருந்து இறங்க முயலும் ரதத்தைச் சருக்குப் போட்டுத் திருப்புவது போன்றிருந்தது அந்தப் பார்வை! ஆனால் இதற்குள் என்ன நேர்ந்தது? இதயத்தையும் மேனியையும் பரவசப் படுத்துகிற தெய்விகமான யாழின் இசை, அந்த இன்ப மயமான ஒலிப் போதை, எங்கிருந்துவருகிறது என்று காண விரும்பி, தன்னையும் மீறிய பரவச ஆவலிலே திரும்பியும் திரும்பாத நிலையிலே, விழிகளை ஏறச் செருகி இந்தப் பக்கமாக நோக்கினாள் தரங்கவல்லி! அவ்வளவு தான்! விழிகள் திரும்பிய மறுவினாடி, ஆழ்ந்த கட்டுப்பாட்டோடு பரம எச்சரிக்கையாகச் சென்று கொண்டிருந்த சந்திரசூடனின் விரல்கள் தடம் புரண்டன! ஒலிக் கோவையிலே, ஒழுங்குக் கிரமத்திலே, மேலே மேலே சென்று கொண்டிருந்த பவித்திரமான யாழின் ஒலி ஒரு கணம் நின்று மறுகியது! மறு கணம் நீலமேக யாழ்ப்பாணர் தமது கைகளை நெரித்தார். அவருடைய வயோதிக மேனியில் ஒரு மின்னலின் வேகம் துவண்டது. அப்படியே பாய்ந்து சந்திரசூடனிடமிருந்து பேரியாழை ஏந்தி எடுக்கலாம் என்று அந்த முதியவர் எழுந்திருப்பதற்குள், பேரியாழிலே 'மட மட' என்று அபஸ்வரக் கோவை ஒரே தொடர்ச்சியாக ஒலித்தது! ''அபசாரம்! அபசாரம்!!'' என்று பெரியவர் கூப்பாடு போடுவதற்குள், தேவதைகளின் காது தீப்படும்படியாக ரஸ முரண்பாடுகள் ஒலித்தன அந்தப் புனிதமான பேரியாழிலே!

மேகத்தில் ஓர் அசைவு உண்டானது போல் இருந்தது! குருக்கள் திகைத்தார்! சமயக் கணக்கர்கள் மருண்டார்கள்! மண மன்றத்தில் பேரிரைச்சல் உண்டாயிற்று. ''அபசகுனம்! அபசகுனம்! நாட்டுக்கு ஏதோ தீங்கு வருவதற்கு அறிகுறி கேட்கிறது!'' என்று கூக்குரலிட்டனர் நிமித்திகர்கள்! பதறிப்போய் வலம்புரித் தீவின் பேரரசன் எழுந்தான். ''நிறுத்துங்கள்! மண விழாவை நிறுத்துங்கள்!'' அபசாரம் நேர்ந்து விட்டது! தெய்வ கோபம் ஆவேசத்தோடு கேட்கிறது! நிறுத்துங்கள்!'' என்று கட்டளையிட்டான்.

''என்ன மூட நம்பிக்கை!'' என்றார்கள் சிலர். ''என்ன நேர்ந்தது!'' என்று திகைத்தார்கள் பலர். பாண்டியப் பிரதானிகளின் கூட்டத்திலோ குழப்பமும் கோபமும் ஆவேசத்தோடு பொங்கின!

(தொடரும்)

பாரத நாட்டில் தற்சமயம் நோயாளிகளுக்கு சிகிச்சையளிப்பதற்குப் போதுமான அளவு பயிற்சி பெற்ற டாக்டர்களும், நர்ஸுகளும் இல்லை. முக்கியமாக கிராமங்களில் வசிப்பவர்களுக்கு நல்ல வைத்திய வசதி அளிக்கக்கூடிய பயிற்சி பெற்ற டாக்டர்களும், நர்ஸுகளும் மிகக்குறைவே ஆனால் நம் இரண்டாம் ஐந்து வருஷ திட்டத்தில் கிராம வைத்திய, சுகாதார பாதுகாப்புகளுக்கு முதல் ஐந்து வருஷ திட்டத்தை விட இரண்டு மடங்கு தொகை அதிகரிக்கப்பட்டிருக்கிறது. அதாவது 1961 வருஷத்திற்குள் சமூக திட்டம், தேசிய விஸ்தரிப்பு சேவை ஸ்தலங்களிலும், இன்னும் இதர இடங்களிலும் 3000க்கு மேல் 'சுகாதார சேவை ஸ்தலங்கள்' ஸ்தாபிக்க திட்டமிடப்பட்டிருக்கிறது. ஆஸ்பத்திரிகளின் இடவசதி 26 சதவிகிதம் அதிகரிக்கப்பட்டு 30,000 கூடுதல் படுக்கைகளுக்கு ஏற்பாடு செய்யப்படும்.

# நோய்களினின்று காப்பாற்ற மேலும் வைத்தியர்கள்...



தேசிய மலேரியா மற்றும் பைலேரியா முதலிய நோய் தடுப்புத் திட்டங்களுக்குத் தேவையான கொசு நாசினி எண்ணெய்களையும், ஸ்ப்ரேகளையும் கூடுதலான அளவில் பர்மா-ஷெல்லார் வழங்கி வருகின்றனர். பெட்ரோலியத்திலிருந்து தயாரிக்கப்படும் பூச்சி நாசினி மருந்துகளையும் பாரத நாடு முழுவதும் விநியோகித்து வருகின்றனர். ஷெல்பெட்ரோலியம் சம்பந்தமான ரசாயன மருந்துகளாகிய ஆல்டிரின், டைல்டிரின், என்டிரின் எல்லா பயிர்களுக்கும் பாதுகாப்பு அளித்து நாட்டின் உணவுப்பொருள்களைக் காப்பாற்றி வருகின்றனர். தவிர, பெட்ரோலியத்திலிருந்து தயாரிக்கப்பட்ட ரசாயனங்கள் கிருமி நாசினி மருந்து தயாரிப்பு முறைகளிலும் பயன் படுத்தப்படுகின்றன.

**பர்மா—ஷெல்...
பாரத நாட்டின்
வாழ்க்கையில்
ஈடுபட்டிருக்கிறது**

“சத்தியன் எழுதியிருக்கும் 'இடி விழுந்த வீடு' என்ற கதை பிரமாதமானது. ஒரு அற்புத சிருஷ்டி என்றே சொல்லலாம்....” இந்த மதிப்புரையுடன் அவனுடைய கதை 'நீர்க் குமிழி' என்னும் பத்திரிகையில் பிரசுரமாகி யிருந்தது.

ஆயிரமாயிரம் பேர்கள் இப்பொழுது அவன் கதையைப் படித்துக் கொண்டிருப்பார்கள். இந்த நினைவு அவன் மனசை நிரப்பியது.

''சத்தியன் கதையைப் படிச்சாச்சா, சார்? விஷயம் பாருங்கோ, அத்தனை சாத்தியமான தில்லே! இருந்தாலும் மனசைக் கவ்விப் பிடிக்கிறது. 'இடி விழுந்த வீடு', தலைப்பே போதுமே, படி படி என்று சொல்வதற்கு'' என்றார் ஒரு வாசகர்.

''அவர் எப்போதுமே ஒரு உண்மைச் சம்பவத்தை மனசிலே வைத்துத்தான் எழுதுவார். இதிலே ஒரு அதிசயம் என்னவென்றால் இந்தக் கதையும் ஆலங்குடி கதையும் ஒன்று தான். அவர் எழுதுகிற அற்புத நடைதான் அதைப் பிரமாதமாக்கி யிருக்கிறது'' என்று கூறினார் மற்றொருவர்.

''ஆலங்குடி கதையா, அதென்ன ஐயா?''

''ஆலங்குடியிலே ஒரு கல்யாணம் நிச்சயமாகி இருந்தது. மறு நாளைக்குக் கல்யாணம். கல்யாண வீட்டிலே ஒரே கும்பல். திடீர் என்று பரபரப்பு. விஷயத்தை விசாரித்தால் கல்யாணப் பெண்ணின் தங்கையும், மாப்பிள்ளையாகப் போகிற பையனும் சொல்லிக் கொள்ளாமல் கம்பி நீட்டி விட்டார்கள். ஊரெல்லாம் இதைப்பற்றித்தான் பேச்சு. இன்றைக்கும் அந்தக் குடும்பத்திலே யாரும் பெண் எடுக்கிறதில்லே..''

* * *

“அசட்டுத்தனமாக இந்தப் பிள்ளைக்கு இதைச் சொல்லப் போக, கதையாக எழுதி விட்டதே. ஈசுவரா! எத்தனை பேர் இதைப் படிப்பார்களோ? பழைய நினைவெல்லாம் வந்து விடும். பெண் கல்யாணம் நிச்சயமாகி யிருக்கும் இந்தச் சமயத்திலா இது பிரசுரமாக வேணும்?'' என்று சிவகாமி அம்மாள் அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள்.

''ஆகா, சத்தியன் மாமா கதையே அலாதி தான், அம்மா. நீங்க படிச்சீங்களா இதை?'' என்று கேட்டுக் கொண்டு வந்த மாலதியிடம் சிவகாமி அம்மாள் எரிந்து விழுந்தாள். ''நீயும் உன் சத்தியனும்! கல்லைப் போட்டானே பாவி! எத்தனை நாள் இதற்காகக் காத்திருந்தானோ? சொந்தப் பிள்ளை மாதிரி நினைத்திருந்தேனே....''

''என்னம்மா, நீங்க சொல்வது எனக்குப் புரியவில்லையே? சத்தியன் மாமா என்னசெய்து



விட்டார்?..'' மாலதிக்கு ஒன்றும் புரிய வில்லே. சிவகாமி அம்மாள் முனகிக் கொண்டே அப்பால் போய் விட்டாள்.

''என்னடா, சத்தியா! மாலதி கல்யா ணம் நின்று போச்சாமேடா! உனக்குத் தெரியுமா?'' என்ருன் கஜேந்திரன்.

''என்ன?'' சத்தியன் நிஜமாகவே பதறி விட்டான். அவன் உடல் பதறியது. இமைப் பொழுதில் அவன் மனசிலே உண்மை பளிச் சிட்டது. அவ்வளவுதான்!....

சத்தியன் அந்த ஊரை விட்டுப் போய் விட்டான். ஏன் என்று ரொம்பப் பேருக்குத் தெரியாது. அவன் யாருக்கும் சொல்ல வில்லே. கண்ணுக் கெட்டாத தூரத்தில்,—சிவகாமி அம்மாளின் சாபங்கள் காதுக்கு எட்டாத தூரத்தில்,—அவன் போய்க் கொண்டேயிருந்தான். மனசிலே நிம்மதி இல்லே.

விசித்திரமான விஷயம் அகப்பட்டது என்ற நினைவில் அழகான கதையை எழுதி விட்டான். இந்தக் கதையின் விளைவு ஒரு பெண்ணின் வாழ்க்கையைப் பாழாக்கும் என்று கனவு கூடக் காணவில்லே அவன். மனமறிந்து செய்த குற்றமில்லே. ஆனால், கல்யாணம் நின்றது நின்றதுதானே! சிவகாமி அம்மாவின் முகத்தை எப்படி அவன் இனி பார்க்க முடியும்? எத்தனை அன்பா யிருந்தவள் அவள். வீட்டிலே செய்த பட்சணம் எதையும் அவனுக்குக் கொடுக்காமல் அவள் சாப்பிட



# கல்யாணமும்

துஷ்யந்தன்

மாட்டாள். மாலதி மட்டும் என்ன? சத்தியன் கதையை அவள்தான் முதலில் படிப்பாள். கடவுளே, அதே சத்தியன் கதையா அவள் கல்யாணத்தை நிறுத்த வேண்டும்? அவள் வாழ்க்கையையே நிர்மூலமாக்கி விட்டது.

* * *

சத்தியன் கல்கத்தா வந்து ரொம்ப நாட்களாகி விட்டன. அவன் வெகுவாக மாறியே விட்டான். உள்ளமும் உடலும் சோம்பிப் போய் விட்டன. நிலைகொள்ளாமல் அவன் மனசு தவித்துக் கொண்டிருந்தது. எங்கு போகிறான், ஏன் போகிறான் என்ற நினைவே இல்லாமல் அவன் அன்று ஷாம் பஜார் தெருக்களில் நடந்து கொண்டிருந்தான்.

எதிரே, அந்தவீட்டு மாடியில் நிற்பது யார்? அவன் கால்களில் பாம்பு தீண்டியது போன்ற உணர்ச்சி! யார் அது? மாலதி போலவே இருக்கிறது. ஆனால் இங்கே அவள் எப்படி வந்து சேர்ந்தாள்?

பக்கத்திலே ஒரு வெற்றிலே பாக்குக் கடை. அங்கே வெற்றிலே போட்டுக் கொண்டே விசாரித்தான்: ''அங்கே யார் குடி இருக்கிறார்கள், தெரியுமா?''

கடைக்கார ஆசாமி, ''ஊருக்குப் புதுசுங்களா? அவங்க கொஞ்ச காலத்துக்கு முன்னே தெற்கே யிருந்து வந்தவங்க. பாவம் ரொம்பக் கஷ்டப் படறாங்க!'' என்ருன்.

சத்தியன் மளமளவென்று நடந்தான். அவன் உடலுக்குள்ளே அத்தனை பாகமும் தீயாகச் சுட்டது. மாலதி இந்த நிலைக்கு வந்ததற்குக் காரணம் அவன்தான். ''ஐயோ, நான் பாவி. மகா பாவி. பிராயச் சித்தம் எதுவுமே கிடையாது இதற்கு?'' அவன் மனசு பொருமியது.

பேய் பிடித்தவன்போல அவன் அந்த வீட்டுக்குள் நுழைந்தான்.

''யார் அது?....'' வெளியே வந்த அம்மாள், சிவகாமி அம்மாளைப் போலத்தான் இருந்தாள். ஆனால் நிச்சயம் அவள் இல்லே. சத்தியன் கொஞ்ச நேரம் தயங்கியபடியே நின்று கொண்டிருந்தான். என்ன கேட்பது என்று அவனுக்குத் தெரியவில்லே.

"உட்காருங்கள். என்ன வேணும்?" என்று கேட்டவாறே அந்த அம்மாளே பேச்சுக் கொடுத்தாள். வீட்டுக்குள்ளே பார்த்து. "திரௌபதி! கொஞ்சம் காப்பி கொண்டு வா" என்று உத்தரவும் போட்டாள்.

சத்தியன் காப்பி கொண்டு வரும் பெண்ணையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்த அம்மாள் சிரித்துக் கொண்டே ," நீங்கள் மதராஸியா?" என்று கேட்டாள்.

சத்தியன் தலையை மட்டும் ஆட்டினான். மனத்துக்குள், 'திரௌபதி எப்படியிருக்கமுடியும்? அவள் மாலதியே தான்! அவளைப் பார்த்தால் என்னைக் கண்டு கொண்ட மாதிரியே தெரியவில்லையே?' என்று எண்ணினான். "நீ மாலதியில்லையா?"

அந்தப் பெண் சத்தியனை ஒரு மாதிரியாகப் பார்த்தாள். "உங்களுக்கு மாலதியைத் தெரியுமா?" என்று கேட்டாள்.

சத்தியன் விழித்தான். "ஓகோ, நீ மாலதி இல்லையா? மாலதி உனக்கு என்ன உறவு?"

"தங்கை..சரியாகச் சொல்ல முடியாது. ஐந்து நிமிஷம் வித்தியாசம். இருவரும் இரட்டைகள். அது சரி! மாலதியை எப்படித் தெரியும் உங்களுக்கு?"

சத்தியன் விவரமாகச் சொன்னான் தன் கதையை—அவன் எழுதிய கதையை—அந்தக் கதையின் பரிதாப விளைவை.

ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள் அங்கிருந்த பெரிய அம்மாள்.

"ஐயா! இத்தனைக்கும் நான்தான் காரணம். நான்தான் அந்த இடிவிழுந்த வீட்டுக் கதையின் கதாநாயகி. உங்களுக்குத் தெரியாது. ஆமாம், சிவகாமி என் தமக்கை. அவளுக்கு நிச்சயம் பண்ணினவரைத்தான் அழைத்துக் கொண்டு வந்தேன் நான். ஆனால் பகவான் என்னைச் சும்மா விடவில்லை. கல்கத்தா வந்து சில நாட்களுக்குள் அவர் என்னை விட்டுப் போய் விட்டார். பிரிவினைத் தகராறுகளில் அவர் பலியாகி விட்டார். இந்தப் பாவி பெற்றெடுத்த இரட்டைதான் மாலதியும் திரௌபதியும். மாலதிக்கு ரொம்பக் கூச்சம். மாசற்றவள். என் தமக்கை அந்த இடி விழுந்த வீட்டை விட்டு வெளியே வந்த பிறகு கல்யாணம் செய்து கொள்ளவேயில்லை; மாலதியை அழைத்துக் கொண்டு போய் விட்டாள். ஆலங்குடி கதையை எல்லாரும் மறந்த பிறகு மாலதிக்கு நல்ல இடத்தில் கல்யாணம் செய்து வைக்கத்தான் அவள் நினைத்தாள். நான் செய்த பாவம் மாலதிக்கு அதுவும் கொடுத்து வைக்கவில்லை."

சத்தியன் மெதுவாக எழுந்தான்.

இத்தனை நாள் அவன் காதலைப் பற்றியோ, கல்யாணத்தைப் பற்றியோ நினைத்ததில்லை. இப்பொழுது அவன் முடிவு செய்துவிட்டான்.

வேறு எந்தக் காரணம் இல்லாவிட்டாலும் அவள் வாழ்க்கையைப் பாழாக்கியதற்குப் பிராயச்சித்தமாகவாவது அவன் மாலதியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். இது அப்போதே ஏன் அவனுக்குத் தோன்றவில்லை? கல்யாணம்! சத்தியனுக்கும் மாலதிக்கும் கல்யாணம். விசித்திரமாகப் படுகிறது. ஆனால் சத்தியன் நிச்சயித்து விட்டான். எங்கிருந்தாலும் அவளைத் தேடிப் பிடித்துவிட வேண்டும். நின்று போன அவள் கல்யாணம் இப்பொழுது நடந்தாக வேண்டும். யாரால் அது நின்றதோ, அதே சத்தியன் அந்தக் கல்யாணத்தை நடத்தி வைப்பான்—மாப்பிள்ளையாக இருந்து! சிவகாமி அம்மாளின் மனம் குளிரவேண்டும். அவள் சாரமற்ற வாழ்க்கையில் துளியாவது ஆறுதல் கிடைக்க வேண்டும். நிச்சயம் அவள் சத்தியனைப் புறக்கணிக்க மாட்டாள். அவளுக்குத் தெரியும் சத்தியன் 'நல்லவன்' தான் என்று.

* * *

'நீர்க்குமிழி'யின் அடுத்த இதழ் சத்தியனின் திருமணச் செய்தியைப் புகைப்படத்துடன் வெளியிட்டது. ஆனால் வாசகர்களில் யாருக்கும் தெரியாது சத்தியனின் மனைவி தான், இடிவிழுந்த வீட்டின் கதாநாயகியினுடைய சொந்தப் பெண் மாலதி என்று!

---

## வர்ணம் எங்கே?









# ரகுபதி ராகவ

42

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

பாரம்பரிய இயற்கை தர்மத்தில் எனக்கு ரொம்ப நம்பிக்கை. ஹிந்து குடும்பத்தில் பிறந்தபடியால் நான் ஹிந்து சமயத்திலேயே இருந்து வருகிறேன். என்னுடைய ஆத்மீக வளர்ச்சிக்கு அது உதவாததாயின் நான் அதை ஒரு வருத்தமுமின்றி விட்டு விட்டு வெளியேறியிருப்பேன். என்னுடைய மனோ தர்மத்துக்கு உகந்தது அல்லதாயின், அதைத் தள்ளிவிட்டே யிருப்பேன். ஆராய்ந்து பார்த்திருக்கிறேன். நான் அறிந்த எல்லாச் சமயங்களுக்குள், விசால நோக்கம் கொண்டது ஹிந்து மதம்தான் என்பது உறுதி. சமய வேறுபாட்டைப் பொருட்படுத்தாமல் எல்லா மதத்தினரையும் நன்மதிப்போடு கௌரவிக்க வேண்டும் என்று வற்புறுத்துவது ஹிந்து சமயத்தைப் போல் வேறு எந்த மதத்திலும் இல்லை. கொள்கைகளைப் பற்றிய சுதந்திரம் ஹிந்து மதத்தில் அளவு கடந்து கிடக்கிறது. இந்த விசேஷம் என்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது. மற்ற சமயங்களைக் கண்டு ஹிந்து மதத்தினர் வெறுப்புக் கொள்ள மாட்டார்கள். அவற்றிலுள்ள நல்ல அம்சங்களை மதித்துத் தமதாக்கிக் கொள்ளவும் ஹிந்து சமயம் இடம் தருகிறது.

பிறரைத் துன்புறுத்தலாகாது என்கிற தர்மம் எல்லா மதங்களுக்கும் பொதுவாயினும் ஹிந்து மதத்தில் அஹிம்சைக்கு மிக உயர்ந்த ஸ்தானம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அஹிம்சையைத் தர்மத்தின் சிறந்த அம்சமாக வைக்கப்பட்டிருக்கிறது. ஜெயின மதமும் பௌத்த மதமும் ஹிந்து சமயத்துக்குப் புறம்பானதாக நான் கருதுவதில்லை. மக்கள் மட்டிலுமல்ல, பிராணி வகை அனைத்தையும் ஒன்றாகக் கருதுவது ஹிந்து மதக் கொள்கை. அதன் சின்னமே பசுவுக்கு நாம் தரும் கௌரவமும் பூஜையும். எல்லாப் பிராணிகளையும் ஒன்றாகக்கருதி, பிறர் நோவைத் தன் நோவாகப் பாவிப்பது அஹிம்சா தர்மம். இதுவே கோ பூஜையின் பொருள். மனிதன் பசுவாகவும் புழுவாகவும் ஜென்மம் எடுப்பான் என்ற கொள்கையும் சர்வஜீவ சமத்துவத்தைக் குறிக்கிறது. ஹிந்து சமயத்தில் எல்லாவற்றிலும் சிறந்த அம்சம் வர்ணாசிரம தர்மம். உண்மையை நாடிய ரிஷிகள் உண்மை ஒன்றையே மதித்த நம்முடைய முன்னோர்கள் வர்ணாசிரம தர்மத்தைக் கண்டார்கள்.

[யங் இந்தியா, 20—10—27]

என்னுடைய சமயம் என்ன என்று கேட்பவர்களுக்கு என்னுடைய சமயம் சனாதன ஹிந்து தர்மம் என்பேன். ஏனெனில்,

1. வேதம், உபநிஷத்துக்கள், புராணங்கள் இன்னுமுள்ள ஹிந்து சாஸ்திரங்களையும் நான் அங்கீகரிக்கிறேன். கடவுள் அவதாரங்கள் எடுப்பதையும் புனர் ஜன்மக் கொள்கையையும் அங்கீகரிக்கிறேன்.

2. வர்ணாசிரம தர்மத்தையும் அங்கீகரிக்கிறேன். ஆனால் பழைய வைதீக முறையில்தான் அங்கீகரிக்கிறேன். தற்காலத்தில் வழக்கத்திலிருக்கும் கெட்டுப் போன முறையில் அல்ல.

3. கோபூஜையை அங்கீகரிக்கிறேன். இதுவும் மக்கள் சாதாரணமாகச் செய்யும்பூஜைமட்டுமல்ல. மிகவிரிந்த பொருளில் நான் அதை அனுசரிக்கிறேன்.

4. மூர்த்தி பூஜையை நான் கூடாது என்று சொல்ல மாட்டேன். அதுவும் நல்ல பூஜை முறையாகும்.

வேதங்களும் மற்ற சாஸ்திரங்களும் தெய்வத்தினின்று நேராக அடைந்தவையாகக் கருதுவார்கள். நான் அவ்வாறு சொல்ல மாட்டேன். ஹிந்துக்களுடைய வேதம் மட்டும் தெய்வீகம் என்றும், கிறிஸ்தவர்கள் இஸ்லாமி

யர்கள் பார்ஸியர்கள் இவர்கள் வேதமாகக் கருதும் சாஸ்திரங்களை தெய்விகம் அல்ல என்றும் சொல்ல மாட்டேன். நம்முடைய வேதத்தைப் போலவே பைபிளும், குர் ஆனும், செந்து ஆவேஸ்தாவும் தெய்விகமே.

சாஸ்திரங்களை நான் அங்கீகரிக்கிறேன் என்றால் அதில் காணும் ஒவ்வொரு மந்திரமும் ஒவ்வொரு மொழியும் என்னைக் கட்டுப்படுத்தும் என்பது அல்ல. மேலும் இந்த அபார சாஸ்திர புஸ்தகங்களை யெல்லாம் நான் நேரில் படித்தா இருக்கிறேன்? இல்லை. ஆயினும், அந்த சாஸ்திரங்களின் முக்கிய தத்துவங்களை உண்மை என்று தெரிந்தே அங்கீகரிக்கிறேன். அந்த சாஸ்திரங்களில் காணும் மொழிகளுக்குப் பிறர் கூறும் பொருளை நான் சில சமயம் ஒப்புக் கொள்ளாமலும் இருக்கலாம். எவ்வளவு படித்தவர்களாயினும் அவர்கள் சொல்லும் சில வியாக்கியானங்களை நான் மறுக்கவும் கூடும். என்னுடைய விவேகத்தில் தர்ம உணர்ச்சிக்கு விரோதமாயிருப்பின் மறுப்பேன். இப்போதுள்ள மடாசாரியர்களும் சாஸ்திரம் ஓதிய பண்டிதர்களும் சொல்லும் அர்த்தத்தை ஒப்புக் கொண்டே தீர வேண்டும் என்று யாரேனும் சொன்னால் ஒப்புக் கொள்ள மாட்டேன். கண்டிப்பாக மறுப்பேன். என்னுடைய அபிப்பிராயத்தில் நம்முடைய சாஸ்திரங்களைச் சரியாக எடுத்துச் சொல்லுகிறவர்கள் தற்போது மிகக் குறைவு. சாஸ்திர அறிவு பெரும் குழப்பத்தில் இருக்கிறது.

அஹிம்சா தர்மத்தைப் பூரணமாக நடத்தாதவன், சத்தியத்தின் பழுதற்ற வடிவத்தைக் காணாதவன், பிரம்மசரியத்தை வழுவாமல் நடத்தி பூரண சுத்தமடையாதவன், பொருள் பற்றை முற்றிலும் விட்டு விட்டு விடுதலையடையாதவன், சாஸ்திரம் உண்மையில் காண மாட்டான் என்பது வாக்கியம். இதை நான் முற்றிலும் அங்கீகரிக்கிறேன்.

ஹிந்து சம்பிரதாயத்தில் பரம்பரையாக வழங்கும் குரு-சிஷ்ய முறையை நான் அங்கீகரிக்கிறேன். ஆனால் இந்தக் காலத்தில் கோடிக்கணக்கிலுள்ள மக்களுக்குத் தகுந்த குரு கிடைக்க மாட்டான். படிப்பிலும் சீலத்திலும் குறைவற்ற சம்பத்தைப் பெற்ற ஆசாரியன் கிடைப்பது அரிது. இதனால் நம்முடைய சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களை நாம் அறிய முடியாது என்று எண்ணக் கூடாது. எந்த மதத்தின் அடிப்படைத் தத்துவங்களையும் எளிதிலேயே அனைவரும் காணலாம். அவ்வாறே ஹிந்து மதக் கொள்கைகளும். ஈசன் ஒருவன் உண்டு. பாப புண்ணியத்தின் பலனாக மறு ஜன்மம் உண்டு. முக்தி உண்டு. இது ஹிந்து சமுதாயத்தைச் சேர்ந்த எந்தப் பாமரனுமே அறிவான். நான்ஒரு சீர்திருத்தக்காரன் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் சீர்திருத்த உற்சாகத்தில் ஹிந்து மதத்தின் அடிப்படைக் கொள்கை எதையும் விட்டுவிட மாட்டேன்.

மூர்த்தி பூஜையை நான் தவறு என்று சொல்ல மாட்டேன் என்றேனல்லவா? அவனவனுடைய பழக்க வழக்கம் இந்த விஷயத்தில் மிக முக்கியமான அம்சம். சில விதமான உருவ வழிபாடுகள் சிலருக்குத்தான் பிடிக்கும். பிறருக்கு பக்தியை உண்டாக்க மாட்டாது. அதனால் நாம் தவறான முடிவுக்கு வரலாகாது. ஏதேனும் ஒரு வடிவத்தையோ குறியையோ வைத்துத்தான் தெய்வ பூஜை செய்வது முடியும். அதுவே இயற்கை. குறியேதும் இல்லாமல் பூஜை செய்வது உள்ளத்துக்குத் திருப்தி தராது. மூர்த்தி பூஜையை விலக்கி விட்ட கிறிஸ்தவர்கள் ஏன் கோவிலுக்குப் போய் பிரார்த்தனை செய்கிறார்கள்? வேறிடத்தில் பிரார்த்தனை செய்வது ஏன் போதாது?

ஏதேனும் ஒரு லிங்கத்தை வைத்துக் கொண்டால் பூஜைக்கும் பக்திக்கும் உதவுகிறது. மூர்த்தியைப் பூஜை செய்யும் எந்தப் பாமர ஹிந்துவும் அந்த மூர்த்தியே கடவுள் என்று எண்ணுவதில்லை. கடவுளைத் தியானிப்பதற்கு ஒரு சாதனமாகத்தான் எண்ணுகிறான். ஆகவே, மூர்த்தி பூஜை குற்றம் என்று கருதுகிறவர்களில் நான் ஒருவன் அல்ல.

நான் சொன்னதிலிருந்து ஒன்று தெளிவாகக் காணலாம். ஹிந்து மதத்தில் எவனையும் வேண்டாம் என்பதில்லை. உலகத்தில் தோன்றிய எல்லா நபிகளுக்கும் ரிஷிகளுக்கும் முனிவர்களுக்கும் ஹிந்து மதத்தில் இடமுண்டு. பிரசாரம் செய்து மக்களை மதத்தினின்று மாற்றும் சம்பிரதாயம் அதில் கிடையாது. பாரத நாட்டில், காட்டிலும் மலையிலும் வசித்து வந்த பல குலத்தினரை ஹிந்து சமயம் தனதாக்கிக் கொண்டிருப்பது உண்மை. ஆனால் இதில் மதமாற்றம் ஒன்றுமில்லை. இயற்கை பரிணாம முறையில் நடந்த நிகழ்ச்சியாகும். அவரவர் தாம் தாம் அறிந்த வகையில் தத்தம் தர்மத்தின்படி ஈசனை வழி படலாம் என்பது ஹிந்து சமயத்தின் சிறந்த உபதேசம். எந்தப் புற சமயத்தோடும் சண்டை கிடையாது. சாந்தமாக எல்லாச் சமயங்களோடும் ஹிந்து சமயம் ஒத்து வாழும்.

[யங் இந்தியா, 6—10—21]

**வா**சல் திண்ணையில் வந்து உட்கார்ந்தார் சர்மா. சென்ற ஒரு வாரமாகவே அவருக்கு உடம்பு சரியில்லாமல் இருந்து அன்றுதான் கொஞ்சம் சௌகரியமாய் இருந்தது.

எதிரே இருந்த ஞானியார் மடத்தில் தேவாரம் ஓதிக் கொண்டிருந்ததை அவர் மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார். அவர் உடம்பு சௌக்கியமாய் இருந்திருந்தால் அவர் மடத்துக்கே போய் விடுவார்.

தேவாரம் ஓதுவது நின்றதும் அவர் உள்ளே கிளம்பிப் போனார்.

கூடத்தில் சந்தியா ரேடியோ கேட்ட வண்ணம் உட்கார்ந்து கொண்டிருந்தவள் சட்டென்று ரேடியோவை நிறுத்தி விட்டு எழுந்து மாடிக்குப் போனாள்

அவள் கண்களில் நீர் ததும்பிக் கன்னத்தில் வழிந்ததைச் சர்மா கவனித்தார். அவள் கண்களில் ஒரு வித ஏக்கம் இருந்ததை அவர் கவனிக்கத் தவறவில்லை. சந்தியாவின் போக்கு அவருக்குப் பிடிபட வில்லை. புரியாத புதிராக இருந்தது. ரேடியோச் செய்தியைக் கேட்பானேன்? கண்ணீர் ததும்புவானேன்?

பரீக்ஷையை உதறிப் போட்டுக் கொண்டார் சர்மா. படுக்கையில் படுத்தும் அவருக்குத் தூக்கமே வரவில்லை.

* * *

**ச**ர்மா ஒரு பி. ஏ. எல். டி. பள்ளிக்கூட இன்ஸ்பெக்டராக இருந்து ஓய்வு பெற்று மூன்று வருடங்கள் ஆகின்றன. ஓய்வு பெற்ற ஒரு மாதத்துக் கெல்லாம் மனைவி காலமானாள். தில்லியி லிருந்து தன் கணவனுடன் வந்திருந்தாள் அவர் பெண் ருக்மிணி. கல்யாணமாகிப் பத்து வருட காலத்தில் அவள் அடிக்கடி வர முடிவதில்லை. இரண்டு வருடங்களுக்கு முன்பு வந்தவள் தாயார் இறந்த போது வந்தாள். அப்பொழுது அப்பாவைத் தன் கூட வந்து தில்லியிலேயே தங்கி விடும்படி வேண்டினாள்.

"ருக்மிணி! கடைசி மூச்சு உள்ள வரையில் பாடலீசுவரரைத் தரிசனம் செய்து கொண்டிருக்கவே விரும்புகிறேன்" என்றார்.

"தள்ளாத வயதிலே, அம்மாகூட இல்லை. தனியாக எப்படி இருப்பீர்கள்? உங்களுக்குக் காலைத் தலையை வலித்தால்...." என்று பெண் மென்று விழுங்கினாள்.

"நீங்கள் எங்களோடு வருவதுதான் எனக்கும் சரியாகப் படுகிறது!" என்றார் அவர் மாப்பிள்ளை.

"பாடலீசுவரரை விட்டு வர மனமில்லை!" என்று கூறினார் சர்மா பிடிவாதமாக.

* * *

**ச**ர்மா திருப்பாதிரிப்புலியூரிலேயே பிறந்து வளர்ந்து உத்தியோகமும் பார்த்தவர். பரம்பரை பரம்பரையாகத் தெய்வ பக்தியில் ஊறித் திளைத்த குடும்பத்தில் வந்தவர். தெய்வ பக்தி உள்ளவர். விடியற் காலையில் எழுந்ததும் இரண்டு மைல் தூரம் நடந்து போய்ப் பெண்ணையாற்றில் நீராடி விட்டுப் பட்டை பட்டையாக விபூதி இட்டுக் கொண்டு வருவார். அவர் முகத்தில் பக்திக் களை பிரமாதமாகத் ததும்பிச் சொரியும்.

வண்டிப் பாளையத்தில் அவருக்குக் கொஞ்சம் நிலபுலன்கள், கரும்புத் தோட்டங்கள் உண்டு. சாப்பாட்டுக்காகத் தூரத்து உறவுக்காரனை ஒரு பதினைந்து வயது ஏழைப் பையனைக் கொண்டு வந்து தமது வீட்டில் வைத்துக் கொண்டிருந்தார்.




**இ**ரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள். மத்தியானம் ஒரு மணி இருக்கும். முப்பது வயதை உடைய ஒரு ஸ்திரீ வந்தாள். முகத்தில் நல்ல குடும்பக் களை வீசிக்கொண்டிருந்தது. "வாருங்கள், யாரைத் தேடுகிறீர்கள்?" என்று அவளைக் கேட்டார் சர்மா.

''தங்களைப் பார்க்கத்தான் வந்தேன்'' என்றாள் அந்தப் பெண்மணி.

''நீங்கள் யார், தெரியவில்லையே!'' என்று வியப்புடன் கேட்டார் சர்மா.

''என் பெயர் சந்தியா. நான் ஒரு பி. ஏ., எல். டி. தஞ்சையிலிருந்து என்னை இவ்வூர்ப் பெண்கள் உயர்தரப் பாடசாலைக்கு மாற்றியிருக்கிறார்கள். வீடு வாடகைக்கு வேண்டும். ஓரிடமும் கிடைக்கவில்லை. தாங்கள் மட்டும் இந்தப் பெரிய வீட்டில் இருப்பதாகச் சொன்னார்கள். நீங்கள் இது வரையில் யாரையும் வீட்டில் குடிவைத்துக் கொண்டதில்லை என்றும் குடிவைத்துக் கொள்ள மாட்டீர்கள் என்றும் சொன்னார்கள். இருந்தாலும் உங்களைக் கேட்டுப் பார்க்கலாம் என்று ஒரு எண்ணம்....'' என்றாள் அவள்.

சர்மா சற்று யோசித்தார். ''சரி, அந்தப் பக்கம் முழுவதும் மாடி அறையையும் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

''வாடகை எவ்வளவு?''

''நீங்கள் எது கொடுத்தாலும் எனக்குச் சரி!''

மறுதினமே சந்தியா அந்த வீட்டுக்குக் குடி வந்து விட்டாள்.

அவளுடன் வேறு யாரும் வரவில்லை. அவள், தானே சமையல் செய்து சாப்பிட்டுக் கொண்டு பள்ளிக்கூடமும் போய் வந்தாள். வந்த ஒரு மாத காலத்துக்குள் அவள் சர்மா



# இன்பக் குரல்

ஸ்ரீவத்ஸன்

வைத் தன் தகப்பனாராகவே பாவித்து விட்டாள். சர்மாவும் அவளைத் தன் சொந்த புத்திரியாகவே பாவித்து வந்தார்.

ஆனால் சர்மாவுக்கு மட்டும், 'அவள் ஏன் தனியாக இருக்கிறாள்? கணவன் குழந்தை குட்டிகள் இல்லையா? கழுத்தில் தாலிக் கயிறு மின்னுகிறதே! குங்குமம் இட்டுக் கொண்டிருக்கிறாளே! சுமங்கலியான இவள் தனியாக இருப்பானேன்?' என்ற சந்தேகம் எழுந்தது. ஆனால் இதைப் பற்றியெல்லாம் அவளிடம் கேட்பது உசிதமல்ல என்று அவர் பேசாமல் இருந்து விட்டார்.

சந்தியா வந்தபோது தன்னுடன் ஒரு ரேடியோவைக் கொண்டு வந்திருந்தாள். அதைக் கூடத்தில் வைத்திருந்தாள்.

சந்தியா வந்து நான்கு தினங்கள் ஆகியும் ரேடியோ ஒரு தடவைகூடப் பாட வைக்கப்படவில்லை. ஒரு வேளை ரிப்பேராயிருக்குமோ என்று சர்மா எண்ணினார்.

'அன்று வியாழக்கிழமை. காலையில் ஏழே கால் மணி இருக்கும். சந்தியா ரேடியோவைத் திருப்பினாள்.

''அகில இந்திய ரேடியோ—நவம்பர் மாதம் 24-ந் தேதி வியாழக்கிழமை, செய்திகள் வாசிப்பது வண்மீகநாதன்'' என்று ஆரம்பித்து, ''இத்துடன் இந்தச் செய்தி அறிக்கை முடிவடைந்தது. அடுத்த செய்தி அறிக்கை பிற்பகல் இரண்டு மணிக்கு'' என்று முடிவடைந்தது. ரேடியோவை மூடிவிட்டு எழுந்தாள் சந்தியா. மத்தியானம் இரண்டு மணிக்கு முன்பாக அவசரம் அவசரமாகப் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாள். மத்தியானத் தமிழ்ச் செய்தியை வைத்தாள். செய்தி முடிந்ததும் ரேடியோவை மூடிவிட்டுப் பள்ளிக்கூடம் போய் விட்டாள். இரவு ஏழேகால் மணிக்கு மறுபடியும் வைத்தாள். செய்தி முடிந்ததும் மூடி விட்டாள். அதன் பிறகு இரண்டு நாட்கள் ரேடியோ மூடிக்கிடந்தது.

அதன் பின் சனிக்கிழமை வந்தது. காலை மத்தியானம் தமிழ்ச் செய்திகளை வைத்தாள். செய்தி முடிந்ததும் ரேடியோவை மூடினாள். அன்று முழுவதும் அவள் ஒரே பரபரப்புடன் காணப்பட்டாள். அன்று அவள் முகத்தைப் பார்த்தால் துன்பப்படுகிறாளா, சந்தோஷப் படுகிறாளா என்பதை அறிய முடியவில்லை. ஏனென்றால் முகத்தில் மகிழ்ச்சியும் துக்கமும் கலந்தே காணப்பட்டன.

இப்படியாக வியாழக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை மூன்று நாட்கள் மட்டும்

ரேடியோ வைப்பாள். எங்கிருந்தாலும் குறித்த காலத்தில் செய்தியைக் கேட்க வந்து விடுவாள். மற்ற நாட்களில் ரேடியோ மூடியே கிடக்கும். பார்க்கப்போனால் அந்த மூன்று நாட்களும் செய்தி கேட்பதற்காகவே பிரத்தியேகமாக ரேடியோ வாங்கப்பட்டது போல் தெரியும்.

சர்மாவுக்கு எதுவுமே விளங்காவிட்டாலும் ஒன்று மட்டும் விளங்கியது.

வியாழக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை இவைகளுக்கும், ரேடியோ செய்திக்கும், சந்தியாவுக்கும் ஏதோ ஒரு வித சம்பந்தம் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார் சர்மா. அன்று எப்படியும் அவளைக் காரணம் கேட்காவிட்டால் மண்டை வெடித்துவிடும் போல் இருந்தது அவருக்கு.

''சந்தியா! வெகு நாட்களாக உன்னை ஒன்று கேட்க வேண்டும் என்ற ஆசை. கேட்டால் தவறுதலாக எண்ண மாட்டாயே?'' என்று ஆரம்பித்தார் சர்மா.

''நீங்கள் என்ன கேட்கப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். வியாழக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை ரேடியோச் செய்திகள் என் வாழ்க்கையில் முக்கியத்துவம் வாய்ந்திருப்பது ஏன் என்றுதானே கேட்க விரும்புகிறீர்கள்? தங்களை என் தகப்பனாராகவே பாவிக்கிறேன். அதனால் சொல்கிறேன், கேளுங்கள்!'' என்று ஆரம்பித்தாள்.

**நா**ன் பிறந்தபோது என்னைத் தங்கத் தாம்பாளத்தில் ஏந்தினார்கள், நெல் கலம் கலமாகத் தானம் கொடுக்கப்பட்டது, என்

பிறப்பை ஊரெல்லாம் பண்டிகையாகக் கொண்டாடினார்கள், கோவில்களில் விசேஷ அர்ச்சனை நடந்தது என்றெல்லாம் சொல்லிக் கொள்ள முடியாது. நான் பிறந்தது என் பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு மட்டுமே தெரிந்திருக்க முடியும். அவ்வளவு ஏழை என் தகப்பனார். நல்ல வேளையாக நானும் என் அண்ணாவுமே அவருக்குக் குழந்தைகள். ஊரில் சர்க்கார் உபகாரச் சம்பளம் பெற்றுப் பெண்கள் பாடசாலையில் எஸ். எஸ். எல். ஸி. வரையில் படித்தேன்.

எனக்கு மணப் பருவம் வந்தது. மதுரையில் ஒரு பிரபல மருந்துக் கடையில் என் கணவர் வேலையாக இருந்தார். அவருடன் கூட அவருடைய தாயார் தகப்பனாரும் இருந்தார்கள். கல்யாணமான மறுமாதமே நான் புக்ககம் சென்றேன். என் அண்ணாவுக்கு ஏற்கனவே திருமணமாகி அவன் தில்லியில் வேலையில் இருந்தான்.

புக்ககம் சென்ற கொஞ்ச நாட்களுக்கெல்லாம் என்னை ஆஸ்த்மா வியாதி பிடித்தது. பனி நாட்களில் இரண்டு நாட்கள் கஷ்டப்படுவேன். பிறகு சரியாகப் போய் விடும்.

அந்த வருடம் அசாத்தியப் பனி பெய்தது. என்னுடைய போதாத காலம் மார்கழி மாதம் முழுதும் ஆஸ்த்மாவுடன் போராடும் படி ஆகிவிட்டது. மாமியாரும் கணவரும் ராத்திரி முழுவதும் கண் விழித்து அனுதாபத்துடன்தான் கவனித்துவந்தார்கள். ஆனால் எங்கே இந்தக் குடும்பம் சண்டை சச்சரவு இல்லாமல் நிம்மதியுடன் இருந்துவிடப் போகி




"ஏண்டா, பெட்டியையும் படுக்கையும் வைத்துக் கொண்டு சும்மா நிற்கிறாய்? பின்பக்கம் போடுடா."
"ஐயா! கார் முன் பக்கம் எது, பின்பக்கம் எது என்று தெரியவில்லை. கொஞ்சம்காண்பிக்கிறீர்களா?"

றதோ என்று பயப்பட்ட சில புண்ணியாத் மாக்கள், என் மாமியாரிடம் அனுதாபப்படுவது போல் காண்பித்துக் கொண்டார்கள்.

"விசாலம்! இந்த ஆஸ்த்மா வியாதிக்கார மாட்டுப் பெண் வரவேண்டு மென்று எவ்வளவு நாட்கள் நீ தவம் இருந்தாய்?"

"நாட்டுப் பெண் மாமியாருக்குச் சிசுருஷை செய்ததைப் பார்த்ததுண்டு. இப்படி வந்த இரண்டாவது மாதமே நாட்டுப் பெண்ணுக்கு மாமியார் சிசுருஷை செய்வாளா?"

"ஆஸ்த்மா இலேசில் போகிற வியாதி இல்லை. வாழ்நாள் முழுதும் இருக்கும். வானத்திலே துளி மப்பு போட்டாலும் கர்புர்னு இழுக்க ஆரம்பித்து விடும்."

"விசாலம், நீ இருக்கிற வரையில் செய்து விடலாம். உனக்கு அப்புறம் உன் பிள்ளை ஆபீஸ் போவானா? இவளுக்குப் பணிவிடை செய்து கொண்டிருப்பானா?"

"என்ன! உன் தலையில் இப்படி எழுத வேணுமா? உன்னைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. கணவனும் மனைவியுமாக நாலு இடத்துக்குப் போய், சந்தோஷமாக இருக்கக் கொடுத்து வைக்கவில்லையே? கல்யாணமான உடனேயே மருந்து பாட்டிலும் அதுவுமாக ஆஸ்பத்திரிக்கு அலையத்தானே உனக்குச் சரியாய் இருக்கிறது. இந்த மனைவி வந்து நல்ல சுகத்தைக் கண்டு விட்டாய்! இந்தச் சின்ன வயசிலே இப்படி உனக்கு ஏற்பட வேண்டாம்" என்று என் கணவரின் மனத்தையும் கலைத்து விட்டார்கள்.

இப்படியாகப் பலர் ஊண்டி விட்டு என் மாமியார், கணவர் இவர்களின் வெறுப்புத் தீயை நன்றாக வளர்த்து விட்டார்கள்.

எனவே, என் அப்பாவுக்கு உடனே வந்து சேரும்படி தந்தி போயிற்று. அந்தச் சமயம் என் அண்ணா டில்லியிலிருந்து அப்பாவைப் பார்த்துவிட்டுப் போக வந்தவன் என்னையும் பார்க்க ஓடி வந்தான்.

"என்ன தகவல்? ஏன் தந்தி அடித்தீர்கள்? சந்தியாவுக்கு என்ன?" என்று கேட்டான்.

என் மாமியாரும் கணவரும் அவனை ரொம்பவும் கேவலமாக நடத்தினார்கள். எனக்காக அவன் பொறுத்துக் கொண்டான்.

எனக்கு வியாதியை மூடி வைத்துக் கல்யாணம் செய்து விட்டதாகவும், நான் அவர்கள் குடும்பத்துக்குத் தேவை இல்லை என்றும் என்னை உடனே அங்கிருந்து அழைத்துப் போகும்படியும் நிர்தாட்சண்யமாய் அவர்கள் சொல்லி விட்டார்கள்.

"ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுக்காதீர்கள்" என்று எவ்வளவோ கெஞ்சினான் அண்ணா.

அவர்கள் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டிருந்தார்கள். கடையில் பொறுமைசாலியான என்னுடைய அண்ணாவுக்கே பொறுமை எல்லை மீறி விட்டது.

"என் தங்கை வியாதிக்காரி என்று தள்ளி வைக்கிறீர்களே, உங்கள் பிள்ளைக்கு இந்த வியாதி வந்திருந்தால் என் தங்கையின் கதி என்ன வாகும்?" என்று துடுக்காகக் கேட்டான்.

என்ன சொல்லி என்ன பயன்? என் அண்ணாவுடன் ஊர் திரும்பிவிட்டேன். வாழாவெட்டி என்ற பட்டம் எனக்குச் சூட்டப்பட்டது. அண்ணாவும் அப்பாவும் கோர்ட்டில் வழக்குப் போட்டு என்னை அவரிடம் சேர்ப்பதாகச் சொன்னார்கள். 'சேர்த்துக் கொள்ளாவிட்டாலும் ஜீவனாம்சம் கொடுக்கட்டுமே?' என்றார் என் மாமா. நான் சம்மதிக்கவில்லை. 'அப்படியெல்லாம் செய்யாதீர்கள்' என்று அவர்களைக் கெஞ்சினேன்.

மாமியாருக்கும் கணவனுக்கும் இரண்டு வருட காலம் நான் எவ்வளவோ கடிதங்கள் எழுதினேன். பதிலே இல்லை. மறுபடியும் வழக்குப் போட அண்ணாவும் அப்பாவும் துடியாகத் துடித்தார்கள்.

"எப்பொழுது என்னை அவருக்குப் பிடிக்கவில்லையோ, அப்புறம் அவரிடம் என்னைச் சேர்ப்பதில் என்ன பயன்? என் சம்பந்தப்பட்டவரை அவர் ஒரு குறையும் இல்லாமல் இருந்தால் போதும். அவரால் நான் சுகப்படாவிட்டாலும் என்னால் அவர் கஷ்டப்படக் கூடாது. அவர் சுகத்தில் தலையிட நான் யார்?" என்று சொல்லிவிட்டேன்.

அவரை விட்டு நான் பிரிந்து ஐந்தாவது வருடமே அவருக்கு மறு விவாகம் ஆகப்போவதாயும் இப்போது வழக்குப் போட்டால் என் கணவர் வழிக்குவரலாம் என்றும் எல்லோரும் சொன்னார்கள். மனுக்கள் கூடத் தயாரித்து விட்டார் என் அப்பா. கையெழுத்துப் போட நான் மறுத்தேன்.

"நீ எக்கேடாவது கெட்டுப் போ!" என்று எல்லோரும் விட்டு விட்டார்கள். அண்ணாவுக்கு என்பேரில் அளவற்ற கோபம்.

அதன் பிறகு என்னுடைய வாழ்க்கையை நானே வகுத்துக் கொண்டேன். எல்.டி. பரீட்சையில் தேறினேன். அதற்குள் அப்பா அம்மா இறந்துபோய் விட்டார்கள்.

எங்கெங்கேயோ உபாத்தியாயினியாக இருந்துவிட்டு இவ்வூருக்கு வந்தேன்.

ஒரு தடவை செங்கல்பட்டில் இரவு வண்டியில் நான் சென்னையிலிருந்து வரும்போது பிளாட்பாரத்தில் அவரையும் அவர் கூட ஒரு

பெண்மணியோடு இரண்டு குழந்தைகளையும் பார்த்தேன். அவரைக் கண் குளிரத் தரிசனம் செய்தேன். என் கணவர் என்னை அழைத்துக் கொள்ளா விட்டாலும் பரவாயில்லை. அவருடைய உடம்பு சௌக்கியமாக இருந்து அவர் நீண்ட நாள் வாழவேண்டும் என்றே அல்லும் பகலும் நான் பிரார்த்தனை செய்து வருகிறேன். அவர் என்னுடன் இல்லாவிட்டாலும் எங்கேயாவது உயிருடன் இருக்கிறார் என்ற நினைவே என்னை மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறது. அவர் உயிருடன் இருந்தால்தானே நான் அவரது அன்பின் அடையாளமாக இந்த மாங்கல்யத்தைத் தரித்திருக்க முடியும்? அவர் கண்காணாத இடத்தில் இருந்தாலும் அவர் சௌக்கியமாக வாழ வேண்டும் என்பதே எனது பிரார்த்தனை.

மூன்று வருடங்களுக்கு முன்பு ஒரு தடவை அண்ணா வந்திருந்தான். என் கணவரை அவன் பார்த்ததாகவும் அவர் அகில இந்திய ரேடியோவில் வியாழன், சனி, திங்கட்கிழமைகளில் செய்திகள் வாசித்து வருவதாகவும் என்னிடம் சொன்னான்.

அன்றே ஒரு ரேடியோ வாங்கிவிட்டேன். என் கணவருடன் சேர்ந்து வாழும் பாக்கியம் எனக்கில்லை. அவரைக் கண் குளிரக் காணும் பாக்கியம் இல்லை. ஆனால் அவர் குரலாவது என் காதில் விழும் பாக்கியம் கிட்டட்டும் என்று நான் பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

ஒரு வாரத்தில் அந்த மூன்று நாட்களும் ஒன்பது வேளை அவர் குரலைக் கேட்கிறேன். அவரை நேரில் காணக் கொடுத்து வைக்காவிட்டாலும் அவர் குரலையாவது கேட்கும் போது எனக்குப் புதிய உற்சாகமும் மகிழ்ச்சியும் ஏற்படுகின்றன.

அவர் என்னைக் கூப்பிட வேண்டாம். அவரோடு நான் போய் இருக்க வேண்டாம். இப்படியே என் உயிருள்ளவரையில் அவர் குரலைக் கேட்டுக் கொண்டிருந்தால் அதுவே எனக்குப் போதுமானது.

வியாழக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை என்வாழ்வின் பொன்னான நாட்கள்.

கண்கள் கலங்க அவள் கதையைக் கூறி முடித்தாள். அதைக் கேட்டுச் சர்மாவின் உள்ளம் கரைந்து விட்டது.

"அம்மா! நீ இவ்வளவு கஷ்டப்பட்டும் உன் கணவன் வாழ்க்கையையே சிதற அடித்துக் கசக்கியும் கூட அவன் சௌக்கியமாய் இருக்கப் பிரார்த்திக்கிறாய். அவன் உன்னைப் பற்றியே சிந்திக்காதபோது நீ அவன் குரலைக் கேட்கத் தவம் இருக்கிறாய். இப்படிக் கணவன் கிராதகனாய் இருந்தாலும் மனைவி அவன் நல்வாழ்வு வாழவே பிரார்த்தனை செய்கிறாள். இப்படிப்பட்ட தியாக மனப்பான்மை பாரதப் பெண்களுக்கு மட்டுமே உண்டு. பாரத தேசம் எவ்வளவோ காலம் அன்னியர் ஆட்சியில் இருந்தும், இன்று கூடத் தலைதூக்கி நிற்பதற்குக் காரணம் பாரதப் பெண்களின் தியாக மனப்பான்மையும் சகிப்புத் தன்மையுமேதான். மற்ற நாடுகளில் கணவன்பேரில் வழக்குப் போட்டு அவனை மனைவி கோர்ட்டில் நிறுத்திவிடுவாள். ஆனால் பாரதப் பெண்ணுக்கோ கணவனே தெய்வம்.

"அம்மா சந்தியா! உன் கதையைக் கேட்டுவிட்டேன். என்னை நீ மன்னிக்க வேண்டும். உன் கணவன் செய்த பாபத்துக்கு நான் பிராயச்சித்தம் செய்யத் துடிக்கிறேன்" என்றார் சர்மா.

"பிராயச்சித்தமா? நீங்களா?" என்று கேட்டாள் சந்தியா.

"வியாழக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை செய்தி வாசிக்கும் வன்மீகநாதன் தான் என் மாப்பிள்ளை. நான் சொன்னால் அவனுக்கு வேதவாக்கு. உன்னையும் அவனையும் சேர்த்து வைத்து விடுகிறேன். நீயும் எனக்கு ஒரு பெண் மாதிரிதான்" என்றார்.

"கூடவே கூடாது. இனி அவர் வாழ்வில் நான் குறுக்கிடுவது முறையல்ல. தவிரவும் உங்கள் பெண்ணை என் தங்கையாகவே பாவிக்கிறேன். அவள் வாழ்வே என் வாழ்வு. என்னையும் உங்கள் பெண்ணாகப் பாவியுங்கள். அதுதான் எனது பிரார்த்தனை" என்றாள் சந்தியா உறுதியான குரலில்.

## "கல்கி" செப்டம்பர் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலையை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்து விடவேண்டும்.

கதைகளைத் திரும்பப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால் தலைகள் வைத்து அனுப்ப வேண்டுமாயக் கேட்டுக் கொள்கிறோம்.

# பங்குப் பணம்

எஸ். ஜி. ஆர்.




புறக்கடையில் 'தடால்' என்ற சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து, ''ஐயோ..அம்மா...! தாத்தா கீழே விழுந்து விட்டாரே..! ஓடி வாயேன்..'' என்று கசியின் கூக்குரல் எழுந்தது.

சமையலறையில் இருந்த பார்வதியும், கூடத்து அறையிலிருந்த கணேசனும் வேகமாக ஓடி வந்தார்கள். புறக்கடையிலே அவர்கள் கண்ட காட்சி....

கைத்தடி ஒரு பக்கம் விழுந்து கிடக்க, கையும் காலும் விறைத்துப் போய் அலங்கோலமாய் விழுந்து கிடந்தார் கிழவர்.

''ஐயோ, இதென்ன கஷ்டம்!'' என்று அலறினாள் பார்வதி.

''உன் கூப்பாட்டை அப்புறம் வைத்துக் கொள். முதலில் அப்பாவைப் பிடி!'' என்றுகூறிய கணேசன் தந்தையின் தலைப் பக்கம் சென்றான்.

பார்வதியும் கணேசனுமாகச் சிரமப்பட்டுக் கிழவரைத் தூக்கி வந்து கூடத்துக்கட்டிலில் போட்டனர். பிறகு தடியை எடுத்து வருவதற்காகக் கொல்லைப்புறம் சென்றான். அங்கே கசி எதையோ கையில் வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். ''என்னடி

அது?'' என்று அவளைக் கேட்டவாறே அதை வெடுக்கென்று பிடுங்கினாள்.

அது ஒரு சாவி...வேறு யாருடையது மல்ல. கிழவருடையதேதான். அவர் மயங்கி விழுந்து விட்டதிலே மடியி லிருந்த சாவியும் கீழே விழுந்துவிட்டது.

''அம்மா, இது தாத்தா பெட்டியி னுடைய சாவிதானே...?'' என்ற சுசியை விழித்துப் பார்த்தாள் பார்வதி. ''அதிகப் பிரசங்கி! சின்னவளாக, சமர்த்தாக இல்லாமல் பெரியவர்கள் மாதிரி கேள்வி கேட்கிறாயே? வாயை மூடிக்கொண்டு இருக்கணும்; இதைப் பற்றி மூச்சு விட்டே...'' என்று முடிக் காமலே அவள் தலையில் நறுக்கென்று ஒரு குட்டு வைத்தாள். சுசி தலையை அழுத்திக் கொண்டாள்.

கூடத்திலிருந்த கணேசன் குரல்கேட் டது. ''தடியை எடுத்து வரவா இவ் வளவு நேரம் ஆச்சு? நான் டாக்டரிடம் போயாக வேணுமே! சீக்கிரம் வந்து தொலையேன்!''

அவள் சாவியைத் தன்மடியில் செருகிக் கொண்டு கைத் தடி யுடன் முன்பக்கம் விரைந்தாள்.



கணேசன் டாக்டர் வீட்டை நோக்கிப் பறந்தான். அரை மணியில் டாக்டர் பின்தொடர உள்ளே நுழைந்தான்.

டாக்டர் மாற்றி மாற்றிக் கிழவரைப் பரிசோதித்தார். பத்து நிமிஷங்கள் கழித்து உதட்டைப் பிதுக்கினார்.

''என்ன டாக்டர்! என்ன, என்ன?'' என்று கணேசன் பதறினான்.

''மிஸ்டர் கணேசன்! நான் உண்மை யைச் சொல்லிவிடுகிறேன். கிழவருக்கு வயதாகிவிட்டது. மேலும் கீழேவிழுந்த அதிர்ச்சி பலமாகத் தாக்கி இருக்கிறது. இனிமேல் நம்பிக்கையே இல்லை. எதற் கும் பிரக்ஞை வருவதற்கு ஒரு ஊசி கொடுத்து விட்டுப் போகிறேன்'' என்று கூறிவிட்டுத் தம் வேலையை முடித்துக் கொண்டு கிளம்பினார் டாக்டர். அவர் தான் என்ன செய்வார்? நோயைக் குணப்படுத்தத்தான் அவருக்குத் தெரி யுமே யொழிய, போகிற உயிரைப் பிடித்து நிறுத்த முடியாதே!

டாக்டர் போய்விட்டார். நிலைமை மோசமாகிக் கொண்டு வருவதை உணர்ந்து கொண்டான் கணேசன். கிழவரின் உயிர் மிஞ்சிப் போனால் இன் னும் எட்டு மணி நேரம் கூட்டில் இருக் கும். அவ்வளவுதான்!

''பாரு.... பம்பாயிலிருக்கும் கோபு அண்ணாவுக்குத் தந்தி கொடுத்து விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பினான் கணேசன்.

கணேசன் போய்விட்டான். பார் வதியின் மனம் 'படு' வேகமாக அடித் துக் கொண்டது. மடியில் இருந்த கிழவரின் பெட்டிச் சாவியைத் தொட் டுப் பார்த்தாள். உடல் முழுவதும் மின்சாரம் பாய்ந்தது போன்றதோர் உணர்ச்சி ஏற்பட்டது.

நேற்றுவரை, ஒரு நாளைக்குப் பத்து தடவைகள் தம் பெட்டியைத் திறந்து மூடும் கிழவரைப் பார்வதி கவனித்து வந்திருக்கிறாள். சில நாட்கள் அவர் பெட்டியைத் திறக் கும் சமயங்களில் பின் னால் சென்று எட்டிப் பார்த்திருக்கிறாள். உள்ளே எவ்வளவு பணம் இருக்கிறது என்று தெரியா விட் டாலும் சில ரூபாய் நோட்டுக்களை அவள் கண்டிருக்கிறாள். ரொக்கமாக ஏதோ பணம் இருக்கிறது என்பது அவளைத் தவிர வேறு எவருக் கும் தெரியாது.

அவள் உள்ளம் சிந்திக்கத் தொடங் கியது. ''அவர் என் னவோ இனி எழுந்திருக்கப் போவ தில்லை. பெட்டியிலோ ரொக்கமாகப் பணம் இருக்கிறது. இது எவருக்கும் தெரியாது. நாளைக்கு மைத்துனர் வந் தால் அந்தப் பணத்திலே பாதியைத் தட்டிக் கொண்டு போய் விடுவார். ஆகையால் பணம் வைத்திருக்கும் விஷயம் எவருக்குமே தெரியக் கூடாது. இந்த அருமையான சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு பணத்தை அப்புறப்படுத்திவிட வேண்டும்.''

சிந்தனையிலிருந்து விடுபட்டு ஒரு முடி வுக்கு வந்தாள் அவள். சுற்றுமுற்றும் பார்த்தாள். கிழவர் நினைவின்றிக் கிடந்தார். சுசி வாசலில் விளையாடிக் கொண்டிருந்தாள். சந்தர்ப்பம் அவ ளுக்குச் சாதகமாக இருந்தது.

விடுவிடென்று கிழவரின் பெட்டி அருகில் சென்றாள். மடியிலிருந்த சாவி யால் பெட்டியைத் திறந்தாள். உள்ளே

பத்து ரூபாய் நோட்டுக்கள் ஒரு கவரில் போட்டு வைக்கப்பட்டிருந்தன. அவள் அவசரமாகப் பணத்தை எண்ணினாள். சரியாக நூறு நோட்டுக்கள் அதாவது ஆயிரம் ரூபாய்கள் இருந்தன. அவள் உள்ளம் குதி போட்டது.

மறுபடியும் வேறு ஏதேனும் இருக்கிறதோ என்று கவரைத் துழாவினாள். கையுடன் கடிதமொன்று வந்தது. பிரித்துப் படிக்கலானாள்.

"இந்தக் கவரிலே ஆயிரம் ரூபாய் வைத்திருக்கிறேன். கணேசனும் கோபுவும் இதைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டியது...."

'நல்ல காலம்! கடிதத்தைப் படித்தோமே' என்று தனக்குள் கூறிக் கொண்டே எல்லாவற்றையும் கவரிலேயே திணித்தாள். பெட்டியைப் பூட்டி விட்டுக் கவருடன் தன் பெட்டியருகில் சென்றாள். அதைத் திறந்து தன்னுடைய பச்சைப் பட்டுப் புடவைக்குள் கவரை மறைத்து வைத்து விட்டு, பெட்டியை மூடினாள். சாவியைக் கொண்டு வந்து கிழவரின் மடியிலேயே செருகி விட்டாள்.

சிறிது நேரத்துக் கெல்லாம் தந்தி கொடுத்து விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்தான் கணேசன்.

எதிர்பார்த்தபடியே எல்லாம் நடந்தன. மறுநாளே கண்ணை மூடி விட்டார் கிழவர். தந்தி கிடைத்ததும், பம்பாயிலிருந்து கோபுவும் அவன் மனைவி சாரதாவும் வந்து சேர்ந்தனர்.

வீட்டிலே ஒரே கும்பல். வருவோரும் போவோருமாக இருந்தது அந்த வீட்டில். அழுகையின் ஒலியும் வரவரக் குறைந்து கொண்டே வந்தது.

பத்து நாட்கள் பறந்து சென்றன. கிழவரின் ஈமக் கடன்கள் எல்லாம் சம்பிரதாய முறையில் நடந்தேறின.

கோபுவும் சாரதாவும் ஊருக்குத் திரும்ப வேண்டிய தினம் வந்தது. அண்ணனும் தம்பியும் தனியாகச் சந்தித்துப் பேசிக் கொண்டனர்.

"அண்ணா! அப்பாவின் பெட்டிச் சாவி இதோ இருக்கிறது. நீயே திறந்து பணம் கிணம் ஏதாவது வைத்திருக்கிறாரா என்று பார்த்து விடு" என்று தாழ்மையாகக் கூறினான் கணேசன்.

"அப்பாவிடம் ஏது பணம்? நான் பெட்டியைப் பார்க்க வேண்டிய அவசியமே யில்லை" என்றான் கோபு.

"அது நியாயமில்லை. பணம் இருக்கிறதோ இல்லையோ, நீ பார்க்க வேண்டியது மிக அவசியம். வா, இரண்டு பேருமே சேர்ந்து போய்ப் பார்த்து விடலாம்" என்று வலுக் கட்டாயமாக அவனை அழைத்தான் தம்பி.

இருவரும் பெட்டியருகில் வந்தனர். பெட்டி திறக்கப்பட்டது. கிழவரின் துணிமணிகளும் கொஞ்சம் சில்லறையும் தவிர அதில் வேறொன்றும் இல்லை. பெட்டியில் இருக்க வேண்டியதைத்தான், முன்பே அப்புறப்படுத்தி விட்டாளே பார்வதி!

நாட்கள் நான்கு நகர்ந்தன. கோபு பம்பாய்க்குச் சென்று மூன்று நாட்கள் முடிந்து விட்டன. இப்பொழுது பார்வதி, சுசி, கணேசனைத் தவிர வேறு யாரும் கிடையாது.

பார்வதிக்குத் திடீரென்று பணத்தின் ஞாபகம் வந்தது. விடு விடென்று பெட்டியின் அருகில் சென்றாள். பெட்டியைத் திறந்து பட்டுப் புடவையினுள் தன் கையை விட்டாள்.

அவ்வளவுதான். பட்டுப் புடவையினுள் கையை விட்டவள் பாம்பு கடித்தது போல் பதறிப் போய் விட்டாள். புடவையினுள் வைத்திருந்த கவரைக் காணவில்லை. கவர் எங்கே?

அந்தப் புடவையை எடுத்து நன்றாக உதறிப் பார்த்தாள். ஊஹூம்.... கவர் காணவே காணோம்.

"ஐயோ! இங்கே வாருங்களேன்" என்ற மனைவியின் அலறல் கேட்டுக் கணேசன் விழுந்தடித்துக் கொண்டு



கிரனூர் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி கே. சுப்பிரமணியனுக்கும், மாயவரம் ஸ்ரீ வி. கணேச அய்யர் அவர்கள் குமாரி சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கும் சமீபத்தில் மாயவரத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!



பையன் :—பேப்பர் ! நாலு பக்கம் ஓரணா......மிருகக் காட்சி சாலையிலிருந்து ஒரு சிங்கம் தப்பித்துக்கொண்டு விட்டது !

ஓடி வந்தான். அவன் பின்னாலேயே சுசியும் வந்தாள்.

"என்ன பாரு....? எதற்காக அப்படி அலறினாய்?" என்றான் கணேசன் மிகுந்த படபடப்புடன்.

"இந்தப் புடவையினுள் ஒரு கவர் வைத்திருந்தேன். அதில் ஆயிரம் ரூபாய் இருந்தது. இப்போது அந்தக் கவரையே காணோம்...." என்று ஓலமிட்டாள் அவள்.

"ஆயிரம் ரூபாயா...? கவரிலா...? புடவைக்குள்ளா.....? ஏது.....? ஏது பணம்....?" என்று கேட்டான்.

"ஏதோ...! முதலில் பணம் காணாமற் போச்சே, அதைப் பாருங்கள்.... ஐயோ! ஒன்றா, இரண்டா? ஆயிரம்..."

"அப்பா...!" என்றாள் சுசி. கணேசன் அவள் பக்கம் திரும்பினான்.

"எனக்குத் தெரியும். நான் சொல்லுகிறேன், அப்பா! தாத்தா அன்றைக்குக் கிணற்றடியிலே விழுந்தபோது அவர் பெட்டிச் சாவியும் விழுந்துவிட்டது. அதை அம்மா எடுத்துவைத்துக் கொண்டாள்..." மேலே கூறுவதற்குள் பார்வதி குறுக்கிட்டாள். "சனியனே! சும்மாயிருக்க மாட்டாய்?"

"பார்வதி.... வீணாக அவள் பேரிலே ஆத்திரப்படாதே.. நீ சொல்லு, சுசி" என்றான் கணேசன்.

சுசி மேலே பேச ஆரம்பித்தாள்: "நீ வெளியே போயிருந்தபோது அம்மா தாத்தாவின் பெட்டியைத் திறந்து ஒரு கவரை எடுத்தாள். நான் ஒளிந்து கொண்டிருந்து பார்த்தேன். அதிலே நிறைய ரூபாய் நோட்டுகள் இருந்தன. அதை அம்மா தன் பெட்டியிலே, பச்சைப் பட்டுப் புடவையின் மடிப்பில் மறைத்து வைத்து விட்டாள்."

"நீ... எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டுதான் இருந்தாயா? நான் உன்னை அப்புறம் கவனித்துக் கொள்கிறேன்.." என்று உறுமினாள் பார்வதி.

"அம்மா! எதற்குப் புலி மாதிரி உறுமுகிறாய்...? நீ பண்ணினது தப்பு இல்லையா? தப்பு செய்தால் கடவுள் தண்டிப்பார் என்று அன்றைக்கு நீ தானே சொன்னாய்? நீ மட்டும் தப்பு பண்ணலாமா?...அதனாலே கடவுள் உன்னைத் தண்டிக்காமல் இருப்பதற்காக ஒரு காரியம் செய்தேன்."

கணேசனும் பார்வதியும் ஏககாலத்தில் "என்ன அது...?" என்றார்கள்.

"பெரியம்மா வந்திருந்தாளோ, இல்லையோ! அவளும் ஒரு பச்சைப் பட்டுப் புடவை கொண்டு வந்திருந்தாள். அந்தப் புடவையை எடுத்து உன் பெட்டியிலே வைத்து விட்டு, உன் புடவையை எடுத்துப் பெரியம்மா பெட்டியிலே வைத்து விட்டேன்!"

"ஆ!.." என்றாள் பார்வதி. "ஐயோ! ஆயிரம் ரூபாயும் உங்கள் அண்ணாவிடம் போய்ச் சேர்ந்து விட்டதே!"

"பாரு! உனக்கு நன்றாய் வேணும். அப்பாவின் பணத்திலே ஐந்நூறு ரூபாய் அவனுக்குச் சேர வேண்டியதைத் தடுத்தாய். அதனால் கடவுள் மொத்தப் பணத்தையும் அவனுக்கே கொடுத்து விட்டார்" என்று கணேசன் கூறி முடித்த பொழுது வாசலில் யாரோ கூப்பிடும் குரல் கேட்டது.

எல்லோரும் வெளியே வந்தனர். தபால்காரர் நின்று கொண்டிருந்தார். "ஸார்! உங்களுக்கு ஒரு 'இன்ஷூரன்ஸ் கவர்' வந்திருக்கிறது!" என்றார் தபால்காரர்.

கணேசன் கையெழுத்துப் போட்டு வாங்கிக் கவரைப் பிரித்தான். உள்ளே ஐம்பது.பத்து ரூபாய் நோட்டுக்களும் ஒரு கடிதமும் காணப்பட்டன. கடிதம் இதுதான்: "அன்புள்ள கணேசனுக்கு, அப்பா வைத்துவிட்டுச் சென்ற ஆயிரம் ரூபாயைப் பற்றி என்னிடம் சொன்னால் நான் பெற்றுக் கொள்வேனோ, மாட்டேனோ என்று மன்னியின் புடவை மூலம் அனுப்பி விட்ட உன் பெருந்தன்மையைச் சாரதா வாய் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கிறாள். ஆயிரம் ரூபாயையும் நீ எனக்கே அனுப்பியது நியாயமல்ல. உனது பங்குப் பணமான ஐந்நூறு ரூபாயை அனுப்பியிருக்கிறேன். பெற்றுக் கொள்....!—கோபு."

# குழந்தையின் ஆரோக்கியம்

## உங்கள் கையில் இருக்கிறது!

தாயே, ருசிமிக்க 'ஒவல்டின்'ஐ தவறாமல் சாப்பிட்டு, உங்கள் குழந்தை திடகாத்திரமாகவும், ஆரோக்கியமாகவும் வளர உதவுங்கள். பிரஸவ காலம் தொடங்கி, குழந்தை தாய்ப் பால் குடித்துவரும் வரை ஒவ்வொரு தாய்மாரின் ஆகார வகையிலும் 'ஒவல்டின்' சேர்க்கப்பட வேண்டும். முக்கியமாக, இதன் சுலபமாக ஜீர்ணிக்கும் தன்மை, இதற்கு தனி மதிப்பளிக்கிறது. 'ஒவல்டின்' லுள்ள பரிசுத்தமான உணவுப் பொருள்கள் மற்றும் இன்றியமையாத வைடமின்கள், குழந்தைகளின் இயற்கைப் போஷாக்கான தாய்ப் பாலை ஏராளமாக விருத்தி செய்கிறது. தாய்ப்பாலில் வளரும் குழந்தைகளே சிறந்து விளங்குகின்றன!

உங்கள் ஸ்டோரில் 'ஒவல்டின்' கேளுங்கள்.




ரேடியோ சிலோன் ஒவல்டின் அமெச்சூர் நேரங் களைக் கேளுங்கள்: ([illegible] 41.72 மீட்டர்கள்) சனிக் கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 மணி வரை. (ஆங்கிலம்—9520 கிலோ சைகிள்ஸ், 31 மீட்டர் கள்) ஞாயிற்றுக்கிழமை களில் இரவு 8 முதல் 8-30 மணி வரை.

# ஒவல்டின்

ஆரோக்கியமயமானது
பிரதியொரு டின்னும்



வினியோகஸ்தர்கள்:
ஜெரோம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

IV. 494







# அன்பிலே பொறுமை

காட்டில் ஒரு புலி யிருந்தது. அதற்கு வயது அதிகமாகிக் கொஞ்சம் தள்ளாமல் போய் விட்டது. அந்தக் கிழப் புலிக்கு ஒரு பெண் இருந்தது. அதற்கு வயது முதிர்ந்ததும் அதை ஒரு ஆண் புலிக்குக் கலியாணம் செய்து கொடுத்து விட்டுத் தாய்ப் புலி சந்தோஷமாக இருந்தது. மானோ மாடோ எருமையோ ஏதேனும் சிக்கினால் சின்னப் புலிகள் தாமும் தின்று கிழப் புலிக்கும் மிகுந்த மாமிசத்தைக் கொடுக்கும். அதுவும் தன் பசியைத் தீர்த்துக் கொள்ளும். தன் தாய் பேரில் பெண் புலிக்கு மிகுந்த பிரியம்.

"என்னை நீ லட்சியமே செய்வதில்லை. எப்போதும் தாயைப் பற்றியே உனக்குக் கவலை" என்று ஆண் புலி தன் மனைவியிடம் குறை சொல்லிக் கொள்ளும்.

"என்னைப் பெற்ற தாயை நான் எப்படி மறக்க முடியும்?" என்று பெண் புலி சமாதானம் சொல்லும்.

* * *

கிழப் புலிக்குத் தன்னுடைய பெண்ணின் நல்ல குணம் தெரியவில்லை. தெய்வத்தைத் தியானித்துக் குறை சொல்லிக் கொள்ள ஆரம்பித்தது.

"தெய்வமே! மாகாளியே! ஏன் என்னை இப்படி அநாதையாக விட்டு விட்டாய்? என் மகள் தன் புருஷனோடு விளையாடிச் சிரித்துக் கொண்டு சந்தோஷமாக இருந்து வருகிறாள். என்னை மறந்தே விட்டாள். நான் பிரியமாக வளர்த்த குட்டி என்னை இப்போது கவனிப்ப தில்லை!" என்றது.

காளியம்மை கிழப் புலிக்குச் சமா தானம் சொன்னாள்: "மகளே! நீ பாக்கிய சாலி. உன் குழந்தை உன்னிடம் மிகப் பிரியமாக இருக்கிறது. தன் புருஷனை அது விட்டு விட முடியுமா? நீதானே விவாகம் செய்து கொடுத்தாய்" என்றாள் தேவி.

"நான்தான் கட்டிக் கொடுத்தேன். ஆனால் விவாகமானதும் இப்படி என்மேல் வைத்திருந்த பிரியத்தை மறந்து விடு வாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. நான் சீக்கிரம் இறந்து போனால் சுகம்" என்றது.

கிறாரே.'" இவ்வாறு அழுதாள் வள்ளியம்மா தன் அண்ணன் சுந்தர முதலியிடம்.

"தான் சம்பாதிப்பதைத் தன் தாயா ரிடம் கொடுப்பதில் நமக்கு என்ன நஷ்டம்?" என்றான் சுந்தர முதலி.

"ஐயோ! அதை ஏன் கேட்கிறாய்? எல்லாம் அவளுடைய பெண்கள் காளி யக்கா நல்லமுத்து இவர்களுக்கு ரகசிய மாகக் கொடுத்து விடுகிறாள். இந்தக் கிழவி தன் மகனுடைய வாழ்க்கை எப்படிக் கெட்டாலும் சரி என்று இப்படிச் செய்கிறாள்" என்றாள் வள்ளி.

"தான் பெற்ற பெண்களின் மேல் கொஞ்சம் பிரியமாக இருப்பதைப் பார்த்து நாம் அசூயை கொள்ளலாகாது" என்றான் சுந்தர முதலி.

"அண்ணா! கொண்ட மனைவியை அலட்சியம் செய்து விடும் ஒருவனுக்கு என்னைக் கொடுத்துக் கெடுத்தீர்களே!" என்று அழுதாள்.




"பைத்தியமே! இப்படிப் பேச வேண் டாம். உனக்குப் புத்தி இல்லை" என்றாள் தேவி.

தேவி சொன்னதில் புலிக்குச் சாந்தி ஏற்படவில்லை. துக்கத்திலேயே இறந்து போயிற்று. தேவியின் அருளால் அந்தக் கிழப் புலி மனித ஜன்மம் எடுத்தது. புலி ஒரு வீட்டுக்கு மருமகளாகப் புகுந்தாள்.

"இப்படி உண்டா, ஒருவர்! நான் என் அப்பா வீட்டில் எவ்வளவோ பிரிய மாக வளர்ந்தேன். என்னை இவருக்குக் கொடுத்தார்களே! இவர் என்னை விரும்பா மல் இம்சை செய்கிறாரே! காரணம் இல்லாமல் கோபித்துக் கொள்கிறாரே! எப்போதும் தன் தாயார், அந்தச் சண் டாளி குப்பம்மாவிடமே தான் சம்பாதிப் பதையெல்லாம் கொட்டி நாசம் செய்து வருகிறாரே! கைச் செலவுக்குப் பத்து ரூபாய்கூட எனக்குத் தரமாட்டேன் என்

பிறகு வள்ளிக்கு ஒரு குழந்தை பிறந் தது. நல்ல அழகான குழந்தை. ஆனால் பிரசவத்துக்குப் பின் கடுஞ் சுரம் கண்டு வள்ளியம்மை உயிர் நீத்தாள்.

அவளுடைய ஆவி தேவியை அடைந் தது. "புத்தி வந்ததா?" என்றாள் தேவி.

"கணவனும் மனைவியும் பிரியமாக இருப்பதே நல்லது. பெற்றோர் அதைக் கண்டு அசூயைப் படலாகாது. அறிவு வந்தது" என்றாள் வள்ளிப் புலி.

"சரி, இப்போது மறுபடி நீ புலி ஆவாயா அல்லது மனித ஜன்மம் வேண்டுமா?" என்றாள் தேவி.

"நான் புலியாகவே இருப்பேனுக! மனித ஜன்மம் வேண்டாம். மனித உலகம் ரொம்பக் கெட்டுப் போயிருக்கிறது!" என்றாள் வள்ளி.

"இன்னும் உனக்குப் பைத்தியம் தீர வில்லை! நீ எங்கேயும் போக வேண்டாம். என் கூடவே இரு" என்றாள் மாகாளி.














# கடைசி ஆசை!

காட்டில் ஒரு யைப் பார்த்து "நான் உன்னை விழுங்கப் போகிறேன். உன்னுடைய கடைசி ஆசை என்ன?" என்று கேட்டது. "நான் ஒரு யை விழுங்க வேண்டும்" என்றது. "ரொம்ப சரி: போய் ஒரு கொண்டு வா" என்றது . , யைத் தேடிப்பிடித்து "நான் உன்னை விழுங்கப் போகிறேன். உன்னுடைய கடைசி ஆசை என்ன?" என்று கேட்டது. "நான் ஒரு யை விழுங்க வேண்டும்" என்றது. "ரொம்ப சரி! போய் ஒரு யைப் பிடித்து வா". என்றது . ஒரு யைத் தேடிப் பிடித்து "நான் உன்னை விழுங்கப் போகிறேன். உன்னுடைய கடைசி ஆசை என்ன?" என்று கேட்டது. எலி "எனக்கு ஒரு யை விழுங்கவேண்டும்" என்றது. "ரொம்ப சரி; போய் ஒரு யைப் பிடித்து வா" என்றது. ஒரு யைத் தேடிப் பிடித்து "உன்னை நான் விழுங்கப் போகிறேன். உன்னுடைய கடைசி ஆசை என்ன?" என்று கேட்டது. "எனக்கு ஒரு யைச் சாப்பிட வேண்டுமென்று விருப்பம்!" என்றது. "ரொம்ப சரி; போய் வா" என்றது . ஒரு யைத் தேடிப் பிடித்து "உன்னை நான் சாப்பிடப்போகிறேன். உன் கடைசி ஆசை என்ன?" என்று கேட்டது. "எனக்கு வெகு காலமாக ஒரு த்தைக் கடிக்க வேண்டுமென்று ஆசை" என்றது. "ரொம்ப சரி; போய் ஒரு த்தைக் கடித்துவிட்டு வா!" என்றது. ஒரு த்தை தேடிப் பிடித்து "உன்னை நான் கடிக்கப் போகிறேன்" என்றது. உடனே பயந்து போய் க்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டது. க்குத் தெரியாமல் பறந்து விட்டது. க்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டது. க்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டது. நரிக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டது த்துக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டது. எனவே எதுவும் எதையும் விழுங்க வில்லை. எல்லாம் தப்பித்துக் கொண்டன!



# கமலாவின் பொம்மை

— குமார் —

கமலா ஒரு சுட்டிகையான பெண். எல்லோரும் அவளிடம் வந்து அன்புடன் கொஞ்சிவிட்டுச் செல்வார்கள். ஒரு சமயம் கமலாவுக்குப் பிறந்த நாள் வந்தது. அதற்குக் குதூகலமான ஏற்பாடுகள் செய்தார்கள். கமலாவின் பேரில் அன்பு கொண்டவர்கள் எல்லோரும் வந்து கமலாவுக்குப் பல பரிசுகள் வழங்கினார்கள்.

கமலாவின் மாமா ஒரு டாக்டர். அவர் வெளியூரில் இருந்ததால் கமலாவுக்கு ஒரு அழகான பொம்மையைப் பரிசாகத் தபாலில் அனுப்பி வைத்தார். தபால்காரச் சின்னசாமி அந்தப் பொம்மையைக் கமலாவிடம் கொடுத்துச் சென்றான். கமலாவுக்கு அந்தப் பொம்மை மேல் அளவுகடந்த ஆசை. அதை அவள் எப்போதும் கீழே வைப்பதேயில்லை. அதற்குப் பால் ஊட்டுவதும் அதைத் தொட்டிலில் போட்டுத் தூங்கச் செய்வதுமாக இருந்தாள். பொம்மைக்கு ஓய்வு ஒழிவே இல்லாமல் போய்விட்டது.



கமலாவின் கை விஷமத்தில் அகப்பட்டு, பொம்மையின் முகத்தில் இருந்த கண், மூக்கு, வாய் எல்லாம் வர வர மங்கி மறைந்து விட்டன. கை கால்கள் தளர்ந்து விட்டன. கையில் எடுத்தால் பொம்மை துவண்டு துவண்டு விழுந்தது. 'அடாடா! என் பொம்மைக் குழந்தையின் உடம்புக்கு ஏதோ வந்து விட்டது. உடனே இதைக் கவனித்து வைத்தியம் செய்ய வேண்டும்' என்று கமலா நினைத்தாள். உடனே அதைத் தன்னுடைய டாக்டர் மாமாவுக்கே திருப்பி அனுப்பி, உடம்பைப் பரிசோதனை செய்து டானிக் கொடுத்து அனுப்பச் சொல்ல வேண்டுமென்று தீர்மானித்தாள். அவ்வாறே மாமாவுக்கு ஒரு கடிதம் எழுதினாள். கடிதத்தில் இங்கியை ஊற்றிக் கிறுக்கியிருந்தாள். அந்தக் கடிதத்தைப் பொம்மையுடன் சேர்த்துக் கட்டிக் கொண்டு போய்த் தெருக் கோடியிலுள்ள தபால் பெட்டியில் போட்டு விட்டு வந்தாள்.



இதைக் கவனித்துக்கொண்டே அங்கு வந்த தபால்காரச் சின்னசாமி குழந்தையின் உள்ளத்தைக் கண்டு சிரித்தான். பிறகு தபால் பெட்டியைத் திறந்து அந்தப் பொம்மையை வெளியே எடுத்தான். அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. "சரி; இந்தப் பொம்மை நிஜமாகவே மாமாவுக்குப் போய்ச் சேரும் என்று நம்பிக் கமலா இதைத் தபால் பெட்டியில்போட்டிருக்கிறாள். பொம்மை புதிய மெருகுடன் திரும்பி வராவிட்டால் அவளுக்கு மிகவும் ஏமாற்றமாகிவிடும். பிறகு அவள் மனம் வேதனைப்படும். தன் மாமா மீது கோபம் கொள்வாள். ஆகையால் கமலாவின் பொம்மையை நானே பொம்மைக்காரனிடம் கொண்டு போய்க் கொடுத்துப் புதுப்பித்து விடுகிறேன். பிறகு அந்தப் பொம்மையை அவள் மாமா அனுப்பியதாகக் கூறிக் கமலாவிடம் கொடுத்து விடுகிறேன்" என்று எண்ணினான்.

சின்னசாமி ஒரு பொம்மைக் கடைக்குப் போய் அதற்குக் கண் மூக்கெல்லாம் புதிதாக எழுதி, புதுச் சட்டை ஒன்று தைத்துப் போட்டு, துவண்ட கால் கைகளைப் பழையபடி சரியாக அமைத்துத் தரும்படி கடைக்காரரிடம் கேட்டான். கடைக்காரனும் அந்தப் பொம்மையை மிகவும் அழகாகச் செய்து புதிய மெருகுடன் புதுப்பித்துக் கொடுத்தார். பிறகு, சின்னசாமி கமலாவின் மாமா எழுதியதைப் போல் ஒரு கடிதம் எழுதி, பொம்மையின் காலில் கட்டி மறுநாள் கமலா வீட்டுக்கு வந்து கதவைத் தட்டித் 'தபால்' என்று கூவினான். கமலா ஓடோடியும் வந்தாள். சின்னசாமி அவள் அன்போடு ஓடிவருவதைப் பார்த்து ஆனந்தப் பட்டான். ஒன்றும் அறியாத அந்தக் குழந்தை உள்ளத்தைத் தானும் பங்கிட்டுக்கொண்டு, "இந்தாம்மா, உன் மாமா பொம்மையின் உடம்பைச் சரி செய்து அனுப்பி இருக்கிறார், பார்!" என்று சொல்லிப் புது மெருகுடன் பிரகாசித்த அப் பொம்மையைக் கமலாவிடம் கொடுத்தான். கமலா ஆனந்தம் தாங்காமல் பொம்மையை வாங்கி அணைத்துக் கொண்டாள். வீடு பூராவும் குதித்துக்கொண்டே ஓடி ஆடினாள். சின்னசாமியின் உள்ளமும் அந்தக் காட்சியைக் கண்டு பூரித்துப் போயிற்று. சிறிது நேரம் இந்தக் காட்சியையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டுச் சின்னசாமியும் மனத் திருப்தியுடன் அங்கிருந்து நகர்ந்தான்.

மறுநாள் சின்னசாமி வழக்கம் போல் தபால்களை எடுப்பதற்காகத் தபால் பெட்டியிடம் சென்று அதைத் திறந்து பார்த்தான். என்ன ஆச்சரியம்! பல கடிதங்களுக்கிடையே கண்டபடி கிறுக்கப்பட்ட கடிதமும் அதில் இருந்தது. அந்தக் கடிதத்தைப் பார்த்த உடனேயே அதைக் கமலாதான் எழுதிப் போட்டிருக்க வேண்டும் என்று தெரிந்துவிட்டது. கமலா தன்னுடைய மாமா அனுப்பிய பொம்மை சௌக்கியமாக வந்து சேர்ந்தது என்றே அதில் எழுதியிருந்தாள். கடிதம் ஒரே கிறுக்கலாயிருந்தது. அந்தக் கிறுக்கலுக்கு அர்த்தம் அதுவாகத்தான் இருக்க வேண்டும்.

கமலா என்ன எழுதியிருக்கக்கூடும் என்பதைச் சின்னசாமி ஒருவாறு ஊகித்துப் புரிந்துகொண்டான். குழந்தைகள் உள்ளத்தை நன்றாகப் புரிந்துகொள்ளும் சின்னசாமிக்கு எழுந்து அவசியம் இல்லை அல்லவா?



# வேடிக்கை விளையாட்டு



## 123456789

மேலே உள்ள ஒன்பது எண்களையும் கூட்டினால் என்ன விடை வரும்? இவ்வளவு எண்களையும் ஒவ்வொன்றாகக் கூட்டி விடை கண்டு பிடிப்பதற்குப் பதிலாக வேறு ஒரு சுலபமான வழி இருக்கிறது. நடுவிலுள்ள ஐந்தையும் கடைசியில் உள்ள ஒன்பதையும் பெருக்கினால் போதும்.







தீக்குச்சியில்: மருந்து உள்ள தலையைக் கிள்ளிப் போட்டு விட்டு, குச்சியை ஜலத்தில் செங்குத்தாக மிதக்க விட முடியுமா? ஒரு டம்ளரில் ஜலத்தை ஊற்றி மிதக்க விட்டுப் பார். முடியாது. ஆனால் தீக்குச்சியின் ஒரு முனையில் குண்டூசியைக் குத்தி மிதக்க விட்டால் சரியாக மிதக்கும்.

சென்ற வாரப் புதிருக்கு விடை: மூன்று சதுரத்தில் நான்கு சதுரங்கள் வந்து விட்டதல்லவா?






கொசு 'ஙொய்' என்று பாடுகிறதல்லவா? ஆனால் கொசு பாடுவதில்லை. கொசு பறக்கும் போது ஏற்படும் சப்தமே அது. பெண் கொசு தான் கடிக்கிறது. ஆண் கொசுவால் கடிக்க முடியாது. ஆண் கொசுவின் ஆயுள் ஒன்பது நாள். பெண் கொசுவின் ஆயுள் 30 நாள்.

காட்டில் சிங்கத்தின் பக்கத்தில் மற்ற மிருகங்கள் பயமில்லாமல் தைரியமாக நெருங்கி மேய்கிறதல்லவா? இது நடக்கக் கூடியதுதானா? பேஷாக நடக்கும். காட்டில் வாழும் மிருகங்கள் சிற்சில சமயங்களில் இம்மாதிரி சிங்கத்திடம் நெருங்கிச் செல்லும்.

சிங்கம் வயிறு நிறையச் சாப்பிட்டு விட்டு நிம்மதியாகப் படுத்திருக்கும் சமயங்களில் அது மற்ற மிருகங்களை ஒன்றும் செய்யாது. அம்மாதிரி சந்தர்ப்பத்தைக் காட்டு மிருகங்கள் தங்கள் இயற்கை அறிவினால் உணர்ந்து கொண்டு சிங்கத்தின் அருகில் பயமின்றிச் செல்வது உண்டு.





# அடைமொழிகளெல்லாம் அற்றுப்போய்விட்டன

நிர்கதியாய் நாங்கள் திணறுகிறோம். சோப்பைப் பற்றிய நல்ல விஷயங்கள் எல்லாம் சொல்லியாகி விட்டது.
நாங்கள் சொல்ல வேண்டியதற்கு பாக்கி ஒன்றும் இல்லை—
இருப்பினும் ஹமாம் சோப் நேர்த்தியானது, உண்மையிலேயே நல்ல சோப் என்பதை நாங்கள் கூற முடியும்.
அழுக்கைப் போக்குவதில் முதன்மை பெற்றது.
ஸ்னானத்திற்குப் பின் ஒரு புதிய புத்துணர்ச்சியைத் தருவது. வாசனை உள்ளதா? ஹீம்! இருக்கிறது. நுரை? ஏராளம். விலை? எல்லோராலும் யோசிக்காமல் வாங்க முடிவது.






[illegible] புதுமலர்ச்சி தருவது

டாடாவின்

## ஹமாம்

டாய்லட் சோப்

டாடா ஆயில் மில்ஸ்.

இந்திய மூலதனத்துடன், இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது.

SISTA'S TOM-2-TAM.

# கண் திறந்தது

ராமப்ரியா

"அம்மா! அம்மா! இங்கே ஓடிவாயேன்! விஜயா வந்து விட்டாள்! பெரியம்மா வீட்டில் வண்டி நிற்கிறது. நான் போய்ப் பார்த்து விட்டு வரப் போகிறேன்!" என்று ஜயா சிறு குழந்தையைப் போல் தாவிக் குதித்துக் கொண்டு ஓடினாள் வாசல் பக்கம்.

"இந்தா ஜயா? என்ன ஓட்டமும் நடையும் வேண்டியிருக்கிறது? போ உள்ளே? அவள் வந்ததும் வராததும் போய்ப் பார்க்க வேண்டாம்!" என்று ஒரேயடியாகத் தடை உத்தரவைப் போட்டாள் லக்ஷ்மி. ஜயாவின் உள்ளத்தில் எழுந்த ஆவலுக்கு முட்டுக்கட்டை போட்டு விட்டாள் தாய். இதுபோன்ற தடைகளை மீறுவது ஜயாவுக்குச் சகஜமென்றாலும் அன்று ஏனோ உடனே கட்டுப்பட்டாள். தாயின் வார்த்தைகளில் ஏதோ அர்த்தம் பொதிந்திருந்ததை அறிந்துகொண்டாள்.

பெண்ணைப் போக வேண்டாமென்று சொல்லிவிட்டு ஜன்னலின் வழியாகப் பக்கத்து வீட்டைக் கவனித்தாள் லக்ஷ்மி.

விஜயா வண்டியிலிருந்து வெள்ளிக் கூஜாவை எடுத்துக் கொண்டு இறங்கினாள். ஏற்கனவே நல்ல அழகி. அதுவும் இப்பொழுது மண வாழ்க்கையின் பூரண இன்பத்தை அடைந்து, தாய்மைப் பேற்றின் வாசலில் வந்து நிற்கும் பெருமை முகத்தில் பளிச்சிட்டது. மடி நிறையத் தாய்மை அழுத்த அவள் அசைந்து அசைந்து நடந்து போவதைக் கண்கொட்டாமல் பார்த்திருந்து விட்டுப் பெருமூச்சுடன் உள்ளே வந்தாள் லக்ஷ்மி.

"உன் பெண் வந்திருக்கிறாளே! போய்ப் பார்த்தாயா?" என்று முகத்தில் மகிழ்ச்சி ததும்பக் கேட்டுக் கொண்டே வந்தார் ராஜாராமன்.

"இப்பொழுது தானே வந்திருக்கிறாள்? மத்தியானமாய்ப் போய்ப் பார்த்துவிட்டு வந்தால் போயிற்று. எனக்கும் சேர்த்துத் தான் நீங்கள் பார்த்தாகி விட்டதே?" என்றாள் லக்ஷ்மி ஒரு தினுசாக.

"உன்னைப் போலப் பொறுமைக் குணம் எனக்கு இல்லை. களங்கமற்ற மனத்துடன் நான் போய்ப் பார்த்து விட்டேன். அவள் உன்னைப் பற்றி நூறு தடவைகள் கேட்டு விட்டாள். அவள் மனதுக்கேற்க நன்றாக மகிழ்ச்சியுடன்தான் இருக்கிறாள்..... சரி, சரி. நேரமாகி விட்டது. எனக்கு இலையைப் போடு!" என்று கூறிக் கொண்டே உள்ளே எழுந்து போனார் ராஜாராமன்.

*

ராஜாராமனும் ராகவனும் ஒன்றுவிட்ட அண்ணன் தம்பிகள். அதாவது அவர்கள் தகப்பனார்கள் இருவரும் கூடப் பிறந்தவர்கள். இருவருடைய வீடுகளும் அடுத்தடுத்தே இருந்ததாலும் குழந்தைப் பிராயம் முதல் ஒன்றாகப் பழகினதாலும் ராஜாராமனும் ராகவனும் சொந்தச் சகோதரர்களை விட அன்னியோன்னியமாக இருந்தார்கள். அவர்கள் இருவருக்கும் வாய்த்த மனைவிகள் லக்ஷ்மியும் விசாலமும் பின்னாமல் விரியாமல் ஒட்டிப் பழகினதால் சகோதரர்களின் நட்பு மீண்டும் நன்றாக உறுதி அடைந்தது.

ராகவனின் பெண் விஜயாவும் ராஜாராமனின் பெண் ஜயாவும் சில நாட்கள் வித்தியாசத்தில் பிறந்தவர்கள். இரு பெண்களும் கலியாண வயதை அடைந்தபொழுது, அவர்கள் தீவிரமாக ஜாதகத்தைப் பார்ப்பதும் வரன் தேடுவதுமாக இருந்தார்கள்.

ராகவனின் நண்பன் மூலமாக ஒரு ஜாதகம் ஜயாவுக்காக வந்தது. அந்த வரன் தில்லியில் மத்திய சர்க்காரில் வேலை பார்த்துக் கொண்டிருப்பதாகவும் பெரிய பரம்பரைப் பணக்காரர்களென்றும் தெரிய வந்தன. ராகவன் உடனே சந்தோஷமாக ராஜாராமனைக் கூப்பிட்டு அனுப்பி, "ரொம்பப் பெரிய இடம்! நம் சக்திக்கு மீறியாவது செய்து முடித்துவிட்டால் குழந்தை சந்தோஷமாக இருப்பாள்!" என்று சொன்னான். பிறகு உடனே சோதிடரை வரவழைத்து ராஜாராமனின் பெண் ஜயாவின் ஜாதகத்தையும் தில்லி வரனின் ஜாதகத்தையும் கொடுத்துப் பார்க்கச் சொன்னார்.

சோதிடர் அரைமணி நேரம் எல்லாம் கணக்குப் போட்டுப் பார்த்துவிட்டு, ஜாதகம் கொஞ்சம் கூடப் பொருந்தவில்லை யென்று உதட்டைப் பிதுக்கி விட்டார். ராஜாராமனுக்கும் ராகவனுக்கும் பெருத்த ஏமாற்றமாகி விட்டது. 'ஜயாவின் ஜாதகம் சேரவில்லை யென்றால் விஜயாவின் ஜாதகத்தைப் பார்க்கச் சொன்னால் என்ன?' என்று ராஜாராமன் தாமே கேட்டு அதைச் சோதிடரைப் பார்க்கச் சொன்னார்.

விளையாட்டாகப் பார்க்கச் சொன்னதில், விஜயாவின் ஜாதகம் தில்லி வரனுக்கு ரொம்ப நன்றாகப் பொருந்துகிறது என்று சொல்லி விட்டார் சோதிடர்.

விஜயாவுக்குக் கலியாணமும் நடந்தேறியது. அவளும் உடனேயே தில்லி புறப்பட்டுச் சென்று விட்டாள். என்னதான் விஜயாவையும் ஜயாவையும் ஒன்றாக நடத்தி அன்பாக இருந்தபோதிலும் லக்ஷ்மிதான் இந்த விவாகம் நடந்ததில் மனமுடைந்து போய் விட்டாள்.



"முதலில் காட்டினாயே, அந்தச் செருப்பை எடு. அதுதான் எனக்குத் தேவை."

ராகவன் வேண்டுமென்று தம் பெண்ணுக்கு நல்ல இடமாகக் கிடைக்க வேண்டுமென்பதற்காக ஜயாவின் ஜாதகம் பொருந்தவில்லையென்று சொல்லும்படி சோதிடரைத் தயார் செய்திருப்பார் என்ற பயங்கரமான கற்பனை ஒன்றைத் தானாகச் செய்து கொண்டாள். அதே மனத்தாங்கலுடனேயே அவள் வளைய வந்து கொண்டிருந்தாள்.

இரட்டைக் குழந்தைகள் போல் விஜயாவும் ஜயாவும் இரு பெற்றோரிடையே அருமையும் பெருமையுமாக வளர்ந்ததெல்லாம்கூட லக்ஷ்மிக்கு மறந்து போய் விட்டது. பொறுமையும் அருமையையும் பாசத்தைக் கூட மறைத்து விட்டன. மேலுக்கு ஏதோ அவர்கள் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தாளே தவிர, உள்ளுக்குள் ஆங்காரம் புகைந்து கொண்டிருந்தது. விஜயாவுக்குத் தனியாக இந்த வரனைப் பார்த்து முடித்திருந்தால் லக்ஷ்மியைவிடச் சந்தோஷப்படுகிறவர்கள் யாரும் இருந்திருக்க மாட்டார்கள். ஜயாவின் வாழ்வை விஜயா அபகரித்துக் கொண்டது போன்ற ஒரு அசட்டுப் பிரமை லக்ஷ்மிக்கு ஏற்பட்டிருந்தது.

விஜயா தில்லி போய் ஒரு வருஷத்துக்குப் பிறகு இன்றுதான் மகப்பேறு காலத்துக்காகப் பிறந்தகம் வந்திருக்கிறாள்.

மத்தியானத்துக்கு மேல் விஜயாவைப் பார்ப்பதற்காகப் போனாள் லக்ஷ்மி. "சித்தி!" என்று வாஞ்சையுடன் வந்து கட்டிக் கொண்டாள் விஜயா. "சித்தி! காலையிலேயே நான் வந்துவிட்டேன். இப்பொழுது தான் என்னைப் பார்க்க வருவதா? எங்களை மறந்து விட்டாய், சித்தி!" என்று கொஞ்சியபடி லக்ஷ்மியின் மேல் சாய்ந்து கொண்டாள்.

"நீ தான் சித்தியை வந்து பார்க்கக் கூடாதா? ஆனால் முன் விஜயாவா நீ? இப்போது பெரிய பணக்காரி ஆகிவிட்டாய். நானெல்லாம் உனக்கு லட்சியமா?" என்று சொன்னாள் லக்ஷ்மி குத்தலாக.

"அதென்ன லக்ஷ்மி, அப்படிச் சொல்லி விட்டாய்? அவள் நல்ல நிலையில் இருப்பது நம்மால் தானே? உனக்குப் பேரன் பிறக்குமளவும் நீதான் அவளைக் கவனித்துக் கொள்ள வேண்டும். ஜயா எங்கே காணோம்!" என்று சாதாரணமாகப் பதில் சொன்னாள் விசாலம்.

"நான் சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன் மன்னி!" என்று மெதுவாகப் பேச்சை மாற்றினாள் லக்ஷ்மி.

விஜயா வந்து இரண்டு மாதங்கள் நிமிஷமாகக் கழிந்தன. ராஜாராமன் ஆபீஸிலிருந்து வரும் பொழுதே தினமும் விஜயாவுக்கென்று ஏதாவது பழங்கள், தின்பண்டங்கள் ஆசையுடன் வாங்கி வருவார்.

"இதெல்லாம் எதற்குச் சித்தப்பா வாங்குவீர்கள்?" என்று நாணத்தோடு கேட்டுக் கொண்டே வாங்கிக் கொள்வாள் விஜயா.

"உனக்கு யார் வாங்கி வந்தார்கள்? எல்லாம் என் பேரனுக்காக வாங்கிக் கொண்டு வந்தேன்!" என்று வாத்ஸல்யத்துடன் சொல்வார் ராஜாராமன்.

"போங்கோ சித்தப்பா!" என்று கொஞ்சிக் கொண்டே உள்ளே ஓடுவாள் விஜயா.

விஜயாவுக்கு நடக்கும் உபசாரங்களையும் அவள் செல்லம் கொஞ்சுவதையும் பார்த்து மோவாயைத் தோள்பட்டையில் இடித்துக் கொள்வாள் லக்ஷ்மி.

ஜயாவும் விஜயாவும் ஒன்றாக எப்போதும் இழைந்தார்கள்; சேர்ந்து சாப்பிட்டார்கள். தில்லி கதையெல்லாம் மணிக் கணக்காகச் சொன்னாள் விஜயா.

ஒரு நாள் திடீரென்று அடிவயிற்றில் வலி எடுக்கிறதென்று "ஐயோ அம்மா!" என்று கத்தி வயிற்றைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள் விஜயா.

உடனே வீடே கலகலத்துப் போய்விட்டது. ராகவன் டாக்டரைக் கூப்பிட ஓடினார். ராஜாராமன் நர்ஸைத் தேடப் புறப்பட்டார். ஜயா விஜயாவுக்கு என்னவோ வந்துவிட்டதென்று அழத் தொடங்கினாள். விசாலம் கையைப் பிசைந்து கொண்டு நின்றாள்.

டாக்டர், நர்ஸ் எல்லாரும் வருவதற்குள் அந்த வலி நின்று போய்விட்டது. "இது சும்மா பொய்வலி!" என்று சொல்லிச் சிரித்தாள் லேடி டாக்டர். "முதல் பிரசவம் பாருங்க. அதனால் நிஜ வலிக்கும் பொய் வலிக்கும் வித்தியாசம் தெரியவில்லை!" என்று கூறினாள் நர்ஸ்.

"இந்த வலி பொய் வலியென்றால் நிஜவலி எப்படியிருக்குமோ?" என்று திகிலுடன் கேட்டாள் விஜயா.

"ராஜாமாதிரி குழந்தை யென்றால் சும்மாவா?" என்று செல்லமாகக் கன்னத்தைத் தட்டிவிட்டுச் சென்றாள் லேடி டாக்டர்.

"சித்தி! நீ என் அருகில் இரு. நீ இருந்தால் தான் எனக்குத் தைரியமாக இருக்கும்!" என்று லக்ஷ்மியின் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள் விஜயா.

"பின் வேறு எதற்காக நான் இருக்கிறேன்!" என்று இடக்காகப் பதில் சொன்

## அரித்து, எரிந்து, கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) கண்டுபிடிக்கப்பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக்கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினால் அவதியுற அவசியமே இல்லை. நோயாளி என நினைத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினால் குணப்படுத்துங்கள்







### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) ஒரு புதிய களிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மை யாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றிச் சுத்தமாக்குகிறது

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலைச் சில நிமிஷத்தில் நிறுத்திச் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்

### திருப்திக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (*Nixoderm*) வாங்கி உபயோகித்துஅதனால்ஏற்படும்பலனைக் கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படி சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான செலவைப் பற்றிக் கவலையுற வேண்டாம். அதன் காலி பாக்கெட்டைத் திருப்பி அனுப்பினால் உங்களுக்கு முழுப்பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு

---

# பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## (பிரைவேட்) லிமிடெட்

ஐ. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 . . . ம த ரா ஸ் - 5
தந்தி: 'EVERMANS' . . . போன்: 85834

சேரக் கடைசி தேதி 6–9–1956 ... முதல் ஏலத் தேதி 8–9–1956

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (2-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி.) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ் விலாசம்: B. 6, பிளாக் III, டெல்லி-ஆஜ்மீரி கேட் ஸ்கீம், புது டெல்லி

**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

னாள் லக்ஷ்மி. அவள் ஆசையாகச் சொல்கிறாள் என்று நினைத்தாள் விஜயா. அவளுக்கு உண்மை தெரிந்திருக்க நியாயமில்லையல்லவா?

அன்றிரவே நல்ல வலி கண்டு விட்டது. டாக்டர், நர்ஸ், லக்ஷ்மி, ராஜாராமன் எல்லாரும் வீடு நிறையக் கூடி விட்டார்கள். டாக்டர் சோதித்துப் பார்த்து விட்டு, ''முதல் பிரசவம், கொஞ்சம் கஷ்டமானாலும் ஆகலாம். எதற்கும் ஆஸ்பத்திரியில் சேர்த்து விடுவது நல்லது'' என்று சொல்லி விட்டாள்.

ஆஸ்பத்திரி, கஷ்டமானாலும் ஆகலாம் என்ற சொற்கள் பெற்றோர்கள் வயிற்றில் புளியைக் கரைத்தன.

ஆம்புலன்ஸுக்கு 'போன்' பண்ணினார்கள். உடனே பத்தாவது நிமிஷம் ஆம்புலன்ஸ் வந்து விட்டது. ஸ்ட்ரெச்சரில் தூக்கி விஜயாவைப் போட்டுக் கொண்டு வண்டியில் ஏற்றினார்கள். அதைப் பார்ப்பதற்கே எல்லாருக்கும் கஷ்டமாக இருந்தது.

செந்தாமரை போன்ற விஜயாவின் முகம் வெளிறிச் சோபையற்று இருந்தது. புசு, புசு வென்று நீல மயிர் முகத்திலே படிந்திருந்தது. கைநிறைய வளைகாப்பு வளையல்கள் குலுங்க அவளை ஏந்திச் சென்றது ரொம்பக் கஷ்டமாக இருந்தது. கூட யார் போவது என்ற பிரச்னை வந்தது. ''லக்ஷ்மி! நீயும் உன் கணவரும் குழந்தையுடன் போங்கள். நானும் உன் மச்சினரும் சற்றுப் பொறுத்து டாக்ஸியில் வருகிறோம்!'' என்று மனசு படபடக்கச் சொன்னாள் விசாலம்.

''நானா மன்னி!'' என்று இழுத்தாற் போலக் கேட்டாள் லக்ஷ்மி. ''ஆமாம், நீயேதான்!'' என்று கூறி அவளையும் இழுத்துக் கொண்டு தாமும் வண்டியில் ஏறிக் கதவைச் சாத்தினார் ராஜாராமன். ஆம்புலன்ஸ் வண்டி புறப்பட்டது, பிரசவ ஆஸ்பத்திரியை நோக்கி. லக்ஷ்மி பதை பதைக்கும் மனத்துடன் விஜயாவின் பக்கத்திலே உட்கார்ந்திருந்தாள். தான் கூட இருக்கும் வேளை நல்ல சமாசாரம் காதில் விழ வேண்டுமே என்ற கவலை அவளை அரித்துப் பிடுங்கியது.

ஆஸ்பத்திரியும் வந்தது. விஜயாவைப் பிரசவ அறைக்கு அழைத்துச் சென்றார்கள்.

அறைக்கு வெளியே போட்டிருக்கும் பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார்கள், ராஜாராமனும் லக்ஷ்மியும்.

அறைக்குள்ளிருந்து இரவின் நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு விஜயாவின் குரல் மட்டும் 'ஆ...ஆ...' என்று பலமாக அலறுவது கேட்டது. விஜயா போடும் ஒவ்வொரு சத்தமும் லக்ஷ்மியின் மனத்திலே ஆயிரமாயிரம் எண்ணங்களை எழுப்பியது. லக்ஷ்மி அப்படியே பெஞ்சியில் சோர்ந்து படுத்து விட்டாள்.

அறையிலிருந்து டாக்டர் வெளியே வந்தாள். ''விஜயாவுக்கு வயிற்றில் ஆபரேஷன் செய்துதான் சிசுவை எடுக்க வேண்டும்போல் இருக்கிறது. அவளுடைய பெற்றோர் அல்லது கணவனின் அனுமதி தேவை!'' என்று வந்து சொன்னாள். ராஜாராமன் பதறியபடி ராகவனை அழைக்கப் போனார். லக்ஷ்மி அப்படியே பெஞ்சியில் சாய்ந்து விட்டாள் மயக்கமாக. அவளுடைய மனச்சாட்சியே அவளைக் குத்தியது. 'பெரிய இடத்தில் வாழ்க்கைப்பட்டு விஜயா மகிழ்ச்சியுடன் இருக்கிறாள் என்று மனசு வெந்து கிடந்தாயே! இப்போது அந்தப் பெண்ணுக்கு உயிருக்கே ஆபத்து வந்து விட்டது. அதை நினைத்து ஆனந்தப்படு. நன்றாக சந்தோஷப்படு!'' என்று அவள் மனம் அவளைக் குத்திக் காட்டியது.

'அப்படியானால் இனி விஜயா பிழைக்க மாட்டாளா? ஊம்... அவள் எங்கே பிழைக்கப் போகிறாள்? ஐயோ! அந்த முல்லைச் சிரிப்பையும் மோகனப் புன்னகையையும் நான் இனிப் பார்ப்பேனா? விசாலமும் ராகவனும்



எப்படி இதைத் தாங்குவார்கள்? தில்லி மாப்பிள்ளை விமானத்திலேறி வந்துவிடுவான். ஆசையுடன் கரம் பற்றிய மனைவிக்கு ஏற்பட்ட கதியை நினைத்து அவன் மனம் என்ன பாடுபடும்? எப்படி இதெல்லாவற்றையும் பார்க்கப் போகி



" நீ இப்படி விஷமம் செய்தாயானால் அப்பாவிடம் சொல்லி ஒரு திருடனைப் பிடித்துக் கொண்டு வரச் சொல்லுவேன். ஆமாம்......"

ஹூம். பகவானே! சோதிக்காதே! இதெல்லாம் யாரால்? வாஸ்தவம்தான். மகா பாவி என்னால்தான்! அந்தக் குழந்தையைப் பார்த்துப் பார்த்து வயிறு எரிந்தது. அதன் உயிருக்கே உலை வைத்தாகி விட்டது. கல் அறை பட்டால் கூடத் தப்பிவிடலாம். கண் பட்டால் தப்ப முடியாதல்லவா? இந்தக் குழந்தை என்னால் அற்பாயுசில் மாண்டுபோனால் என் குழந்தை மட்டும் எப்படி வாழமுடியும்? இனி ஒருவரையும் நான் பொறாமைக் கண்களால் பார்க்க மாட்டேன். இந்த ஒரு தடவை என் விஜயாவுக்கு உயிர்ப் பிச்சை அளித்துவிடு பகவானே! என் கண்கள் திறந்துகொண்டன. விஜயா நான் வளர்த்த குழந்தை. நான் என் கையால் சாதம் பிசைந்து போட்டுத் தலைவாரிப் பின்னிவிட்டு எல்லாம் செய்திருக்கிறேன். விசால மன்னியின் மனம் வாஸ்தவத்திலேயே விசாலம்தான். அவள் வயிறு எரியும்படி பார்க்காதே. ஈசுவரி! குழந்தையைக் காப்பாற்று! எங்கள் குடும்பத்தைத் துக்கத்தில் மூழ்க அடிக்காதே! ஜயாவும் தாங்கமாட்டாள். ஐயோ! விஜயா! என் தங்கமே!" என்று பெரியதாகப் புலம்ப ஆரம்பித்து விட்டாள் லக்ஷ்மி.

" லக்ஷ்மி! நன்றாக இருக்கிறது. மகா தைரியசாலி என்று உன்னை அனுப்பினேனே துணைக்கு. எழுந்திரு" என்று அவளைத் தட்டி எழுப்பினாள் விசாலம்.

கண்களில் மாலை மாலையாக வழியும் கண்ணீருடன், " விஜயா எங்கே மன்னி? அவளுக்கு ஆபரேஷன் ஆயிடுத்தா! குழந்தை பிழைத்து விட்டாளா?" என்று விக்கிய படியே கேட்டாள் லக்ஷ்மி. அவள் குரல் கம்மிப் போயிருந்தது. அதில் கவலையும் வருத்தமும் பிரதிபலித்தன.

" அசடு! விஜயாவுக்கு ஒன்றுமில்லை. விமலா வென்ற ஒரு பெண்ணுக்கு ஆபரேஷன் நடக்கப் போகிறதாம். விஜயா வென்று டாக்டர் தடுமாறிச் சொல்லி விட்டான். உன் கணவர் இதைச் சொல்ல ஓடோடி வந்தார். நாங்களும் இங்கே உன்மாதிரி அழுது கொண்டே வந்தோம். பிறகுதான் எங்களுக்கு உண்மை தெரிந்தது!" என்று ஆதரவுடன் தட்டிக் கொடுத்தாள் விசாலம்.

லக்ஷ்மிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. நிகழ்ந்ததெல்லாம் கனவு என்பதில் அவளுக்கு ஏற்பட்ட திருப்தி கொஞ்ச நஞ்சமல்ல.

அறைக்குள்ளிருந்து " அம்மா " வென்று பெரியதாக விஜயாவின் அலறல் ஒன்று கேட்டது. உடனே குவா, குவா வென்று குழந்தை அழும் சப்தமும் கேட்டது.

" விஜயா பிரசவித்து விட்டாள்!" என்று அங்கே ஏகக் குரல் கேட்டது. " பெண் குழந்தை, பெண் குழந்தை" என்று டாக்டரும் நர்ஸும் சொல்லிக் கொண்டு அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்கள். துல்லியமான வெள்ளைத் துணியில் அந்தச் சின்னஞ் சிறு குழந்தையைப் போர்த்திக் கொண்டு வந்து காண்பித்தாள் நர்ஸ். குழந்தையின் குங்குமச் சிவப்பான உடலும் உருண்டை முகமும் எல்லாரையும் மெய் மறக்கச் செய்தன.

"பிடாரிமாதிரி என் குழந்தையை இவள் என்ன பாடுபடுத்தி விட்டாள்!" என்று குழந்தை பிறந்தவுடன் பட்டப் பெயர் சூட்டினார் ராகவன். எல்லாரும் அதைக் கேட்டுக் கொல்லென்று நகைத்தார்கள்.

"எட்டரை பவுண்டு குழந்தை! அதுதான் இவ்வளவு சிரமம்!" என்றார் ராஜாராமன்.

"போக்கிரிக் குட்டி! முழிக்கிறதைப் பாரு!" என்று தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு கொஞ்சினாள் லக்ஷ்மி.

'புதுக் குழந்தையின் கண் திறக்கும்போது தான் என் கண்களும் திறந்து புத்திவந்தது!' என்று மனத்துக்குள் சொல்லிப் பெருமூச்சு விட்டாள் லக்ஷ்மி.

"கவலைப்படாதே, விஜயா! இனி நிம்மதியாகத் தூங்கு!" என்று விஜயாவின் அருகில் சென்று அவள் தலையை அன்புடன் வருடிக் கொண்டே கூறினாள் லக்ஷ்மி.

"எனக்கென்ன கவலை, சித்தி! அப்பா அம்மாவோடு நீங்களும் சித்தப்பாவும் போட்டி போட்டுக்கொண்டு அன்பு செலுத்தும் போது நான் ஏன் கவலைப்பட வேண்டும்?" என்றாள் விஜயா மெல்லிய குரலில். அளவற்ற அன்பும் பாசமும் அவளுடைய பேச்சில் தொனித்தன.

'இந்தக் குழந்தையிடம் பொறாமையுடன் நடந்து கொண்டோமே?' என்று வெட்கத்தினால் தலைகுனிந்தாள் லக்ஷ்மி. அவள் உள்ளத்தில் தோன்றிய களங்கமெல்லாம் அந்தக் கணமே நீங்கி விட்டது.

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited**
**Managing Editor: T. Sadasivam**

## தனது கவுனே வெண்மையென அவள் நினைத்திருந்தாள் ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!

**உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது**

அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ணத் துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை. குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!




**. . . சலவை செய்ய மிகவும் சுலபமானது**

**இந்த அற்புத சோப் பவுடர்**

